பெண்கள் தங்கள் மனோபாவங்களை
அநேக அழகான வழிகளில்
வெளிப்படுத்துகிறார்கள்.

விமல் அவற்றில் ஒன்று.




100% பாலியெஸ்டர் புடவைகள்

உங்கள் விமல் ரீடெய்லரிடம் கேட்டு வாங்குங்கள்: ஸில்கி ப்ரீஸ், ஸில்கி வேவ், ஸில்கி சார்ம், சூப்பர் ஸில்கி வேவ், கஸ்தூரி, ஸில்கி ஷீன, டிவைன் ஜ்வெல், ஸரிகா, ஸில்க் ஸிலிமோர், விம்பெர், ஷாமோ ஸில்க், ஷெமோனா க்வீன்.

# வாருங்கள் தஞ்சைக்கு...



தஞ்சையின் மையப் பகுதி

என்று யாரும் அழைக்காமலே பயண மாகேனும் தஞ்சை நகருக்கு. சரித்திரப் பிர சித்தி பெற்ற நகரம்: தமிழரின் தனிக் கலை களையும் கலாசாரத்தையும் தரணியெங்கும் பறைசாற்றும் நகரம் என்று அரசியல் வாதிகள் மட்டுமே பெருமை பேசும் பழங் கதைகள் எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளி வைத்துவிட்டு, இன்றைய தஞ்சை எப்படி இருக்கிறது என்று பார்த்தால்—

தஞ்சை நகர வாசிகள் கோபித்துக்கொள் ளக்கூடாது. சற்று ஏமாற்றமாகவே இருந் தது.

சீனிவாசபுரத்திலோ, மேல — கீழ வீதி களிலோ, புதிதாக ஏதும் வீடுகளோ, கட்ட டங்களோ காணப்படவே யில்லை. பழைய கலை சொட்டக் காட்சி யளிக்கின்றன இத் தெருக்கள். ஆனால் மருத்துவக் கல்லூரிக் குப் போகும் வழியில் ஈசுவரி நகர், தங்கம் நகர், முனிசிபல் காலனி, எழில் நகர், என்று புதிய காலனிகள் தோன்ற ஆரம்பித்திருக் கின்றன. அடுத்தடுத்து வீடுகள் அமைந்த தெருக்களும் இப்பகுதிகளில் குறைவு. இங்கொன்றும் அங்கொன்றுமாய் முளைத் திருக்கின்றன வீடுகள். கிரவுண்டு 7000 ரூபாயாம். இப்போது. 2500 ரூபாய்கூட இருக்கவில்லை முன்பு என்று அங்கலாய்த் தார் ஒருவர். சென்னை வாசிகளைக் கேட்டால் பொறாமைப்படுவார்கள் என்று இவருக்குத் தெரியாது!

செய்த புதிதில் மழையில் நனைந்து, வெயி லில் காய்ந்து, பிறகு பங்களா காம்பவுண்டு முகப்பில் உள்ள கூர்க்காக் கூண்டு மாதிரி யான அமைப்பில் ஒண்டிக் கொண்டிருந்த மாமன்னன் இராச இராச சோழனின் பள பளக்கும் கம்பீரமான சிலை, இப்போது பெரிய கோவிலின் இடப்புறம், கடந்த ஓராண்டு காலமாக அமைதியான பூங்கா வின் மத்தியில் அழகாகக் காட்சி யளிக்கிறது. 'தமிழக முதலமைச்சர் மாண்பு மிகு, தமிழ வேள், டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களால் மாண்புமிகு கல்வி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் திறக்கப்பட்டது' என்று முன் புறமும், 'பெருவுடையார் கோவில் கட்டிய பெருந்தகை இராச இராச சோழனின் சிலை யைக் கோயிலில் சிறப்பான இடத்தில் வைக்க மத்திய அரசின் அனுமதி மறுக்கப் பட்டதால், பொது இடத்தில் சிலை அமைக் கும் நிலை ஏற்பட்டது' என்று விதண்டாவாத அழுமூஞ்சித்தனம் பக்கவாட்டிலும் தெரிய, பீடத்தில் நிற்கிறார் மாமன்னர். ஹே ராஜ ராஜா! உன்னை இராச இராசனாக்கி, தங்கள் சுய பிரதாபங்களுடன் கூடிய சிமெண்ட் பீடத்தில் ஏற்றி, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் நீ நிர்மாணித்த ஒரு பிரம்மாண்ட மான கோயிலில் உன் பெயரே எங்கும் கண் ணில் படாதபோது, சுருக்கு வழியில் சரித் திரப் புகழ் பெற்றிட நினைக்கும் எங்கள் அரசியல்வாதிகளை நினைத்துப்பார்த்திருந்தால் இப்படி ஒரு மகா மகா பெரிய கோயிலை உரு வாக்கியே இருக்க மாட்டாய்! ஒரு சின்னஞ் சிறு கதை: நிலத்தை உழுது கொண்டிருக் கிற எருதின் காதில் வந்து அமர்ந்த ஈயை நோக்கிப் பறவை யொன்று, என்ன செய்து கொண்டிருக்கிறாய்? என்று கேட்ட தாம். 'இந்தப் பெரிய நிலத்தை உழுது

கொண்டிருக்கிறோம் — நானும் இந்த எருதும்!' என்றதாம் ஈ.

● நகரில் ஆட்டோ ரிக்ஷாக்கள் மருந்துக்குக் கூட கிடையாது. மீட்டர் வைத்த டாக்சிகள் இல்லை. சைக்கிள் ரிக்ஷாக்களே நீக்கமற நிறைந்திருக்கின்றன. இரண்டே இரண்டு மோட்டார் வைத்த சைக்கிள் ரிக்ஷாக்கள். வங்கிகள் கடன் கொடுத்து உதவியிருக்கின்றன. ஒரு நாளைக்குக் கிட்டத்தட்ட ஐம்பது ரூபாய் சம்பாதிக்கிறார் ஒருவர். பத்து ரூபாய் பெட்ரோலுக்குச் செலவாகிறதாம். நிச்சயம் பாக்கிப் பணத்தில் பாங்குக் கடனை ஒழுங்காகக் கட்டிவிடுவார்!

ஜன நெரிசலும் நடமாட்டமும் அதிகமாக இருக்கும் பேருந்து நிலையப் பகுதியையும், ரயிலடியையும் விட்டால், மற்றப் பகுதிகள் ஆள் நடமாட்டம் குறைந்து கலகலப்பே இல்லாமல் இருக்கின்றன. சைக்கிளில் அவசரமாகவோ, சாவகாசமாகவோ போகும் நபர்கள் கூட அப்படி யொன்றும் அதிகமாக இல்லை. ஸ்கூட்டர்கள் வெகு வெகு குறைவு. சாலையில் சில கார்களும் பஸ்களும் விரையும்போது மண் புழுதி புகையாகக் கிளம்பித்தூசி மேகம் படர்கிறது. தார் ரோடு போட்டார்களாம், தமிழ் பல்கலைக்கழகம் நிறுவும்போது. ''நல்ல மழை காலத்தில் தார் ரோட் போட்டு இப்போது தான் பார்க்கிறோம்!'' என்கிறார் எம்.எல்.ஏ..

சினிமாத் தியேட்டர்கள் அதிகமாகக் கண்ணில் படவில்லை. ஆபிரகாம் பண்டிதர் வீதியின் துவக்கத்தில் புதிதாக கணேஷ் டாக்கீஸ் வளர்ந்து வருகிறது. உரிமையாளர் நடிகர் திலகம் சிவாஜி.

● தமிழ்ப் பல்கலைக் கழகம் ஸ்தாபித்ததால் ஏற்பட்ட நன்மைகள் என்னென்ன என்று பள்ளிக்கூடப் பையன்களுக்குப் பரீட்சையில் கேள்வி கேட்டால், மாணவர்களே, மலைக்க வேண்டாம். ''150 சோடியம் வேபர் விளக்குகள் தெருக்களில் போட்டிருக்கிறோம். தெருவோர நடைபாதைகள் அமைத்திருக்கிறோம்'' என்று நகராட்சியினர் சொல்லுகின்றனர். நினைவு வைத்துக் கொள்ளுங்கள். நிறைய மார்க் கிடைக்கும். தாற்காலிகமாக தமிழ்ப் பல்கலைக் கழகம் அரண்மனை விளாகத்துக்குள் அமைந்திருக்கிறது. ஆனால் மருத்துவக் கல்லூரியை ஒட்டி, சுமார் ஆயிரம் ஏக்கருக்கு மேல் இதற்காகவென்றே ஒதுக்கப்பட்டிருக்கிறதாம். நில ஆர்ஜிதப் பணிகள் நடைபெற்று வருவதாகக் கேள்வி.

● தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய திறந்தவெளி சிறைச்சாலை தஞ்சையில்தான். நூற்றுப் பதினைந்து ஏக்கர் நிலத்தில், அறுபதுக்கு மேற்பட்ட சிறைவாசிகள் வேலிக் கம்பிக்குள் சுதந்திரமாகச் சுற்றி வந்து, நெல்லும் கரும்பும் பயிர் செய்து, காய் கறி விளைவித்து, சற்றே நல்ல உணவு உண்டு, ஆரோக்கியமாக வளைய வருகிறார்கள். இந்தத் திறந்த வெளிச் சிறைச்சாலை — வாசிகளை அந்தந்த ஊர்ச் சிறைகளுக்கே அனுப்பிவிட்டு, இந்த இடத்தையும் பல்



✖ ராஜராஜன் சிலை

✖ பிரகதீஸ்வரர் கோயில்





கலைக் கழகத்துக்காக எடுத்துக் கொண்டு விட வாய்ப்பு இருக்கலாம் என்று உள்ளூர் அதிகாரி யொருவர் சந்தேகமாகத் தெரிவித்தார்.)

● சந்தித்த பலரும் வெளியிட்ட ஒரு முக்கியமான பிரச்னை — மருத்துவக் கல்லூரிக்குப் போகும் வழியில் உள்ள ஒரு சின்னஞ் சிறு குறுகலான மேம்பாலம்தான். எதிர் எதிராக இரண்டு வாகனங்கள் வந்தால் மோதிக் கொள்ளாமல் போகவே முடியாது! லாரிகள் போகக் கூடாது என்ற அறிவிப்புப் பலகையைச் சுலபமாகச் சாய்த்துப் போட்டிருக்கிறார்கள். ரயில்வேயைக் கேட்டால் ஹைவேஸ் ஆட்களைக் கேளுங்கள் என்கிறார்கள். அவர்களைக் கேட்டால் இவர்களைக் கேளுங்கள் என்கிறார்களாம். ஆக, மிக அற்பமான இந்த மேம்பாலப் பிரச்னை, தீர்க்க முடியாத ஒன்றாக விளங்குவது இந்த 1981ல் மிக ஆச்சரியம்தான்!

● உருப்படியாக ஏதேனும் செய்திருக்கிறீர்களா என்று இளைஞர்களுக்கு மட்டுமேயான ஜேஸீஸ் அமைப்பாளர் ஒருவரைக் கேட்டபோது, ரத்த தான சங்கம் அமைத்ததையும், 1200 பேர்களுக்கு 'ப்ளட் குரூப்பிங்' எடுத்து, விலாசத்தோடு தொகுத்து வைத்திருப்பதையும் குறிப்பிட்டார். எந்த விபத்துச் சமயத்திலும் உதவும் சிரிய பணி. சபாஷ் ஜேஸீஸ்! அடுத்தாற் போல் வேறு என்ன புதிய திட்டம் வைத்திருக்கிறீர்கள்?

---

# தொழிலதிபர் அண்ணாமலை

**மி**ராசுதார்கள், டாக்டர்கள், வக்கீல்கள் இவர்களுக்கு மத்தியில் தஞ்சையில் அபூர்வமாய்த் தனித்துத் தென்படும் தொழில் அதிபர்களில் ஒருவர் எஸ். பி. அண்ணாமலை. லயோலா கல்லூரி பட்டதாரி. 26 வயது. சொந்த ஊர் புதுக்கோட்டையைச் சார்ந்த அறங்கியம். வட்டித் தொழில் நடத்தி வந்த பரம்பரை. இவர்கள் 1976ல் கடன் நிவாரணச் சட்டம் வந்ததும் பிளாஸ்டிக் பை தயாரிக்கும் தொழிலில் புகுந்தார்.

கஸ்டமர்களுக்கு ஏற்ற மாதிரி ரகம் ரகமான பைகள் உற்பத்தி செய்கிறார்கள். வெறும் பை மட்டும் அல்லாது அவர்கள் பெயர், பிற விவரங்களையும் பையிலேயே அச்சடித்துத் தருகிறார்கள். முக்கிய கஸ்டமர்: திருமலை திருப்பதி தேவஸ்தானம். (லட்டு போடுவதற்கான பை) பளிச்சென்று நாலு வித வர்ணங்களை மாற்றி மாற்றி ஒரே சமயத்தில் அச்சடிக்கும் யந்திரம் இங்கு உள்ளது. இதுதான் அதிக விலையாம்.

"18 டன் ஒரு மாசத்தில் உற்பத்தி பண்ணுகிறோம். ஆனால் ஒன்று. பில்லுக்கான 'இன்டிமேஷனை'க் கொடுத்தால், சென்னையில் பாங்குக்குப் போய்ப் பணம் கட்டி கிளியர் செய்து லாரி ரசீதை எடுத்துச் சாமானைக் கொண்டு வந்து விடுவான்! இங்குள்ளவர்களுக்கு ஒவ்வொரு காரியத்துக்கும் படித்துப் படித்துப் பல முறைசொல்லவேண்டியிருக்கிறது!"

'லக்ஷ்மி பிளாஸ்டிக்ஸ்' என்கிற இந்த நிறுவனத்தைத் தவிர சிவல், காகிதப் பை தயாரிக்கும் கம்பெனிகள் இரண்டும் இவர்களைச் சார்ந்ததுதான்.



※ திரு அண்ணாமலை

※ நாலு வண்ண பிளாஸ்டிக் பை தயாராகிறது



# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்.




பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது, பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது - உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK&E.PS.7 TM



# சமுதாய நோய்களுக்குக் காந்தீய மருந்து!

சர்தார் வேதரத்தினம் அவர்களின் சீடர் திரு கே. டி. ரங்கநாதன், தஞ்சை மாவட்ட சர்வோதய மண்டல் தலைவர். காந்தியடிகள் இறந்த அன்றிலிருந்து சட்டையே அணிவதில்லையாம். ஆங்கிலமும் தமிழும் சரளமாகப் பேசுகிறார் என்பது மட்டுமல்ல, அத்தனை அரசியல் கருத்துக்களையும் ஆணித்தரமாகச் சொல்லுகிறார். அருகில் இருப்பவர் திரு எஸ். பி. சௌந்தரம் 1936 முதலே தாழ்த்தப்பட்டோர் நலனுக்காகப் பாடுபட்டு வரும் 71 வயது சமூக ஊழியர். இளைஞர்களுக்கு ஈடாக இன்னும் இவர்களிருவரும் சலியாது பொதுநல ஊழியம் செய்கிறார்கள். இவர்களிடம் உரையாடிய போது திரட்டிய சில கருத்துக்கள்:

''தீண்டாமை ஸ்தூலமாகப் போயிருக்கிறது என்றாலும், சூட்சுமமாகப்போகவில்லை. சர்வே பண்ணி, பெரும் பகுதி கிராமங்களில் டீ ஸ்டால்கள், சலூன், கோயில் ஆகிய பொது இடங்களில் இத் தீமை நீண்டாமல் பார்த்துக் கொள்கிறோம். தீவிரமான தீண்டாமை ஒழிப்புப் பணிகளுக்காகச் சில பிளாக்குகளை நேரிடையாகத் தேர்ந்தெடுத்துப் பணிகள் செய்கிறோம்.

''வருடத்தில் காந்தி ஜெயந்தி அன்றும், காந்திஜி மறைந்த தினத்தன்றும் பாத யாத்திரை மேற்கொள்ளுகிறோம். பாத யாத்திரையில் எல்லா ஹரிஜனங்களும் எங்களுடன் கலந்து கொண்டு கூடவே வருகிறார்கள்.

''ஹரிஜன் ஒர்க்கர்ஸ்காம்ப்நடத்துகிறோம். திருப்பூந்துருத்தி, திருப்பழனம் முதலிய கோயில்களில் உழவாரப் பணியை அடிப்படையாக வைத்துக் கூட்டம் போட்டு, சாப்பாடு போட்டு, கள்ளைக் குடிக்காதீர்கள் சுத்தமாய் இருங்கள் என்று வேண்டுகோள் விடுத்துப் பிரசாரம் செய்கிறோம். ஜனங்களிடம் சொன்னால் கேட்கிறார்கள்.

''பிரசாரம் செய்யப் போகும் இடங்களில் கூட்டம் முடிந்தவுடன், 'குடிக்க மாட்டோம்' என்று உறுதி மொழிப் பத்திரம் எழுதி வாங்குகிறோம். கடுவெளி கிராமத்துக்குப் போய் போதனைகள் செய்தோம். அத்தனைபேரும் கையெழுத்துப் போட்டார்கள். சத்தியம் செய்த நபர் ஒரு நாள் ஒரு கல்யாணத்தின்போது குடித்து விட்டதாகத் தாமே முன்வந்து தெரிவித்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

''வேலைக்குப்போகும்விவசாயக் கூலிகள் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களின் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளக் குழந்தைகள் காப்பகம் நடத்துகிறது ஹரிஜன சேவக் சங்கம்.

''ஹரிஜன முன்னேற்றம் கட்சி சார்பற்ற அமைப்பின் மூலமாகத்தான் செய்ய முடியும் என்ற காரணத்தால், தெய்வீகப்பேரவையை நிறுவி, தெய்வீகத்தையும் காந்தியத்தையும் இணைத்துப் பணியாற்றி வருகிறோம். சிறு சிறு சச்சரவுகள், தகராறுகள் எல்லாவற்றையும் நாங்களாகவே தீர்த்து வருகிறோம்.

''அப்பூதியடிகள் பரம்பரையில் வந்த சீதாராமய்யர் என்பவர், திருப்பழனத்தில் எல்லா ஹரிஜனங்களுக்கும் சாப்பாடு போட்டு, இலையையும் தாமே எடுப்பார்!

''புன்னைவாசல் என்கிற ஊரில் 150 ஹரிஜனங்கள் பட்டதாரிகள். ஹரிஜனங்களுக்கு என்று அங்கே தனியே உயர்நிலைப் பள்ளி கூட இருக்கிறது!

''ஜாதி வேற்றுமை — வறுமை — அறியாமை: இவை இருந்தால்தான் அரசியல்வாதிகள் பிழைக்க முடியும்!

''கள்ளை விவசாயத் தொழிலாளர்கள் வேலை முடிந்ததும் குடிப்பதால் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு நன்மை என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ள மாட்டோம். அதர்மமான பலவந்தச் சேர்க்கைகள்தான் அதிகமாகும்.

''இப்போதே தஞ்சையில் 45 சதவீதம் முதல் 75 சதவீதம் கரும்புச் சாகுபடி ஆகிவிட்டது. இந்த லட்சணத்தில் கரும்பு போன்ற 'கேஷ் கிராப்' இன்னும் போடுங்கள் என்கிறார் அமைச்சர் ஒருவர். மக்கள் நலன் என்ன ஆவது என்று யோசித்துப் பார்க்கிறார்களா இவர்கள்?

''எத்தனையோ திராவிடக் கழக உறுப்பினர்கள் தெய்வீகப் பேரவையில் சேர்ந்திருக்கிறார்கள். இவர்கள் சமயத்துக்கு விரோதிகள் அல்ல; சீர்திருத்தமே இவர்கள் நோக்கம்.

''தெய்வீகப் பேரவை மீனாட்சிபுரத்தில் செயல்பட்டிருந்தால், மதமாற்றம் அங்கே நிச்சயம் நடைபெற்றிருக்காது!''



⌘ திரு எஸ். பி. சௌந்தரமும் திரு கே. டி. ரங்கநாதனும்

# என்ன சொல்கிறார் எம்.பி?

**நா**டாளு மன்ற காங்கிரஸ் (இ) உறுப்பினர் திரு சிங்கார வடிவேலு காங்கிரஸ் குடும்பத்தைச் சேர்ந்தவர், தமது பாட்டனார் காலத்திலிருந்தே. மன்னார்குடியில் பள்ளியிலும், திருச்சியில் கல்லூரியிலும், சென்னையில் சட்டக் கல்லூரியிலும் பயின்றவர். 79ல் நாடாளு மன்ற இடைத் தேர்தலில் தஞ்சையில் போட்டியிட்டு வென்றவர். மத்திய அரசின் விவசாய அமைச்சக ஆலோசனைக் கமிட்டியில் அங்கத்தினர்.

இவரிடம் எண்ணி மூன்றே கேள்விகள்:

1. தஞ்சை தொழில் மயமாக என்ன செய்ய வேண்டும்?

இங்கே இருக்கிற மக்கள் விவசாயத்தைத் தான் பூரணமாக நம்பியிருக்கிறார்கள் இரண்டு மூன்று சர்க்கரை ஆலைகள் தவிர வேறு எதுவும் இங்கே குறிப்பிடும்படியாக இல்லை. டெக்ஸ்டைல் பாக்டரி ஒன்றிரண்டு இருக்கிறது.

ஒரத்தநாடு, பேராவூரணி ஆகிய இரண்டும் பின்தங்கிய தாலுகாக்கள் என்று அறிவிக்கப்பட்டிருக்கின்றன. தஞ்சையில் கிடைக்கிற கச்சாப் பொருட்களான வைக்கோல், கரும்புச் சக்கை ஆகியவற்றின் அடிப்படையில்தான் தொழில்கள் அமைய முடியும். மின்சாரம், விற்பனை வரிச் சலுகைகள் அளிக்கப்பட வேண்டும். இங்கே 'கார்டு போர்டு' தொழிலகம் துவங்கலாம்.



⌘ திரு சிங்காரவடிவேலு எம்.பி.

வேதாரண்யத்தில் உப்பு சார்ந்தப்பட்ட தொழில்கள் வர வாய்ப்பு இருக்கிறது. ப்ரபோசல் போய்ச் சரியாக வரவில்லை. விவரங்களை மீண்டும் கேட்டு விசாரித்து வருகிறேன். பி.எச்.ஈ.எல். ஆன்ஸிலரி யூனிட் ஒன்றை ராணிப்பேட்டைக்கு மாற்றியிருக்கிறார்கள். வால்வ் யூனிட் ஷிப்ட் பண்ணுவதாகச் சொல்கிறார்கள். இது தஞ்சைக்கு வந்தால் நன்றாகஇருக்கும். வேறு மாவட்டத்துக்குக் கொண்டு போவதற்குப் பதில், தஞ்சைக்குக் கொண்டுவர முயற்சி செய்கிறேன். இது பின்தங்கிய மாவட்டமல்ல; ஆனாலும் இங்கே தனியார் தொழில் துறையில் ஈடுபட மாட்டார்கள்! கரும்புச் சாகுபடி அதிகமாக இருப்பதால் மேலும் ஓரிரு சர்க்கரை ஆலைகள் தோன்ற வசதிகள் உண்டு.

2. உங்களிடம் பொதுவாக மக்கள் தெரிவிக்கும் குறைகள் என்ன?

கிராமப் பகுதிகளில் தெரு விளக்குகள் சரியாக எரிவதில்லை. கிராமப் பஞ்சாயத்தின் ஓவர்ஹெட் டாங்கின் மோட்டார் சரியாக வேலை செய்வதில்லை. கிராமங்களுக்குப் புறநகர்ப் பேருந்து வசதிகள் போதிய அளவுக்கு இல்லை.

3. தமிழ்ப் பல்கலைக் கழகம் தஞ்சையில் அமைந்ததால் நகருக்கு உடனடி லாபம் என்ன?

நகர் சீரமைப்புப் பெற்றிருக்கிறது. மாநில அரசு நகராட்சிக்குக் கூடுதல் நிதி வசதி அளித்திருக்கிறது. அதிக டிரான்ஸ்பார்மர்கள் அமைத்ததில் மின்சார விநியோகம் முன்னைக்கு இப்போது அபிவிருத்தி அடைந்திருக்கிறது. அரசு அதிகாரிகள் சரியான முறையில் கண்காணித்துச் செலவு செய்தால் அதன் பலன் மக்களை நிச்சயம் அடையும்.

## கருடன் கோட்டை!

தஞ்சைக் கோட்டைக்கு "கருடன் கோட்டை" என்ற சிறப்புப் பெயர் உண்டு.

ஆகாய விமானத்திலிருந்து கோட்டையின் அமைப்பைப் பார்த்தால் கருடன் பறக்கும் நிலையில் உள்ளதுபோல் தோன்றும். அதனால் தானோ என்னவோ கோட்டைக்குள் இருப்பவர்களை எந்த விஷப்பாம்பும் கடித்து இறந்ததாகச் செய்தி கிடையாது.

- டி. பி. பத்மநாபன்





# உழவுதான் இருக்கே, தொழில் எங்கே?

சீனிவாசபுரத்தில் வசிக்கிறார் தஞ்சை நகர சட்டமன்ற உறுப்பினர் திரு நடராசன் (தி.மு.க.) மூன்றாவது முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் சட்ட சபைக்கு. வீட்டின் முகப்பில் கறுப்பு-சிவப்புக் கட்சிக் கொடி கம்பத்தில் பறக்கிறது. உள்ளே ஹாலை ஒட்டிய அறையில் மூன்றடி உயரத்துக்கு இரண்டு குத்து விளக்குகள் கம்பீரமாக வைக்கப்பட்டிருக்கின்றன.

**உங்கள் தொகுதி மக்களுக்கு நீங்கள் என்ன பணி ஆற்றியிருக்கிறீர்கள்?**

கொள்ளிடத்திலிருந்து தஞ்சாவூருக்குக் குடிநீர் கொண்டு வரும் திட்டம் நிறைவேறும் தறுவாயில் இருந்தது. இன்னும் ஆறு மாதங்கள் பதவியில் இருந்திருந்தால் வெற்றிகரமாக முடித்து வைத்திருப்போம். எப்படி வீராணம் திட்டம் தோல்வி என்று சொல்கிறார்களோ அது போலவே ஆக்கி விட்டார்கள் இதையும். 'போர்' போட்டு, குழாய்கள் எல்லாம் கூட அமைத்தும் முழுமையாக முடியாமல் போய்விட்டது. கனெக்ஷன் கொடுத்துத் தண்ணீர் கொண்டு வரும் வேலை நின்றுபோய் விட்டது. முடிந்திருந்தால் வழி நெடுக 12 மைலில் உள்ள எல்லா ஊர்களுக்கும் குடிதண்ணீர் கிடைத்திருக்கும்.



⌘ திரு நடராசன் எம்.எல்.ஏ.

திருச்சி மாவட்டத்தை இணைக்கும் பாலம் கொள்ளிடம் பாலம். 1974ல், எங்கள் ஆட்சியில் முடிக்கப்பட்டது இது. சுற்று வழியைக் குறைத்துக் குறுக்குப் பாதையாகப் போட்டு முடித்தோம் இதை.

பொதுப் பணித்துறைக்குச் சொந்தமான பெண்ணாறு, வெட்டாறு ஆற்றங் கரைகளில் தனியார் வாகனங்கள் போக முடியாமல் இருந்தது. தி. மு. க. ஆட்சி இவை பொதுச் சாலைகளாக மாற்றப்பட்டன.

என்னுடைய கட்சியைப் பொறுத்த வரை நான் வேலையில் தீவிரமாக இருப்பவன்தான். ஆனாலும், மக்களின் எந்தச் சாரார் என்னை வந்து பார்த்து, குறைகள் தெரிவித்தாலும், கட்சி — ஜாதி வித்தியாசமின்றி அவற்றை நிவர்த்தி செய்து வருகிறேன். அதிகமான பிராமண சமூகத்தாரின் வோட்டுக்கள் எனக்குத்தான் வருகின்றன!

**தஞ்சை மட்டும் தொழில் துறையில் ஏன் பின்தங்கிக் கிடக்கிறது?**

மிராசுதார்கள், தங்கள் செல்வத்தைத் தொழிலில் போடத்தயங்குகிறார்கள். மேலும் ஒரு கோவை மில் அதிபரிடம் இருக்கும் செல்வம் இங்கே ஒரு தஞ்சை மிராசுதாரிடம் இருக்காது. தஞ்சாவூர்க்காரர்கள் அறிவாளிகள் என்பதால், கல்வியறிவில் தேர்ந்தவுடன் வடக்கே நல்ல வேலை தேடிப் போய் விடுகிறார்கள். ஐ.ஏ.எஸ். ஆகிறவர்கள் மத்திய, மாநில அரசுகளில் உயர் பதவி வகிக்கப் போய்விடுகிறார்கள். தொழிலில் இவர்களுக்கு நாட்டமே இருப்பதில்லை.

இன்னொரு முக்கிய காரணம் — தஞ்சையைத் தொழில் துறையில் பின்தங்கிய மாவட்டம் என்று அறிவித்து, அதற்குண்டான சலுகைகள் எதுவும் இதுவரை அளிக்காதது. மத்திய அரசின் மானியம் கிடைப்பதால் தேவகோட்டை, புதுக்கோட்டை ஆகிய இடங்களில் சிறு தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டு அவை வளர்ந்து வருகின்றன. அது போல மத்திய அரசு மானியம் கிடைத்தாலொழிய, இங்கே தொழில் வளம் பெருக வாய்ப்பு இல்லை.

**என்னென்ன தொழில்கள் இங்கே துவங்கலாம்?**

விவசாயத் தொடர்பான தொழில்களைத்தான். வைக்கோல், கரும்புச் சக்கையிலிருந்து காகிதம் தயாரிக்கலாம். இப்போது பொதுவாக டெக்ஸ்டைல் யூனிட்டில் நஷ்டம் கிடையாது. அதில் 500, 600 பேருக்கு வேலை கொடுக்கலாம். டிராக்டர் உட்பட, உழவுக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் துவங்கலாம். அரசு ஆதரவில் ரசாயனம் சம்பந்தப்பட்ட தொழில்கள் வேதாரண்யம் உப்பளங்களில் துவங்கி, லட்சம் பேருக்கு வேலை கொடுக்கும் திட்டம் இருந்தது முன்பு. அதை வெட்டிச் சிதைத்துச் சுருக்கி இப்போது பெயரளவில் ஏதோ ஆரம்பித்திருக்கிறார்கள். திருச்சியிலிருக்கிற பி.எச்.இ.எல் மாதிரி, மத்திய அரசு தஞ்சையிலும் ஏதாவது பெரிய தொழிற்சாலை அமைக்க வேண்டும்.

**தமிழ்ப் பல்கலைக் கழகம் நிறுவியதை வரவேற்கிறீர்களா?**

தமிழ்ப் பல்கலைக் கழகம் அமைவதை வரவேற்கிறோம். ஆனால் அதற்காக ஆன ஏராளமான செலவை ஒப்புக்கொள்ள மாட்டோம். பந்தல், அலங்காரம், ஒளி விளக்குகள் என்று ஏகமாகச் செலவழித்தார்களே தவிர, யூனிவர்சிட்டிக்காக உருப்படியாக எதுவும் செய்யவில்லை.


நீதிபதிகளுக்கு மனை வழங்குதல்
அந்துலே


நேர்மையான தொழில் - வர்த்தகம்
அபரிமித வரிகள்
கறுப்புப் பண பத்திரம்
கள்ளமார்க்கெட்


நான் சொந்தக் காலில் நிற்பேன்!
தமிழக இ.காங்கிரஸ்

# அமரகவி நூற்றாண்டு அடக்கத்தோடு நடக்கட்டும்!

தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர் பாரததேசம்...
இன்னமும் அப்படியேதான் இருக்கிறது!

ஆட்சிகள் பல மாறிய பின்னரும், அரசியல் சுதந்திரம் பெற்று முப்பத்து நாலு ஆண்டுகளுக்குப் பிறகும் மக்கள் வாழ்க்கைத்தரம் உயரவில்லை.

இந்த நிலையில் வருகிறது மகாகவி பாரதியின் நூற்றாண்டு.

கொண்டாட வேண்டியதுதான்; ஆடம்பரமாக அல்ல, அடக்கமாக.

ஆனால் தமிழக அரசு இவ்விதம் சிந்திப்பதாகத் தோன்றவில்லை. அது ஒரு பிரும்மாண்டமான செலவுத் திட்டத்துடன் தயாராக இருப்பதாய்த் தெரிய வருகிறது.

உலகத் தமிழ் மாநாடு நடத்துகிறோம் என்று சொல்லி ஏகப்பட்ட பணத்தை வேட்டுவிட்டது போதாதென்று பாரதி விழா தொடர்பாக மேலும் கோடிக்கணக்கான ரூபாய்களைப் பூவாணம் விடப் பூர்வாங்க யோசனைகள் நடக்கின்றன.

பாரதியார் நூற்றாண்டு விழாக் கொண்டாட்டங்களைக் கவனிப்பதற்கென்றே, அது தொடர்பான திட்டங்களை நிறைவேற்றுவதற்கென்றே நியமிக்கப்பட்டுள்ள விசேஷ அதிகாரி திரு கிருஷ்ணபாரதியின் சுற்றறிக்கை அச்சத்தைத் தருகிறது! பக்கம் பக்கமாகப் பத்து லட்சத்துக்கும் ஐந்து லட்சத்துக்கும் பல்வேறு திட்டங்கள். இடையிடையே ஒரு கோடிச் செலவினங்கள்! உலகத் தமிழ் மாநாட்டுக்கு ஐந்து கோடி செலவானால் பாரதி நூற்றாண்டுக்கு மூன்று கோடியாவது செலவாக வேண்டாமா என்ற ரீதியில் ஆட்சியாளரின் சிந்தனை செயல்படுவது போல் காண்கிறது.

பணம் எங்கிருந்து வருகிறது? அரசுக்கு வரிசெலுத்துவோர் பணக்காரர்கள் மட்டுமல்ல.

கஞ்சி குடிப்பதற்கிலார் — அதன்
காரணங்கள் இவையென்று அறிவுமிலார்
பஞ்சமோ பஞ்சம் என்றே நிதம்
பரிதவித்தே உயிர் துடிதுடித்துத்
துஞ்சி மடிகின்றாரே

அவர்களிடமிருந்தும் பைசா பைசாவாகப் பெறப்படுகிறது வரிப்பணம்.

இவர்கள் துயர்தீர்க்க வழியறியாத அரசுக்கு இவர்கள் பணத்தை விரயம் செய்ய ஏது உரிமை?

பாரதியே விரும்ப மாட்டான். 'ஏழைத் தமிழகம் இந்தச் செலவைத் தாங்காது' என்பான்.

அவசியம் செய்யப்பட வேண்டியது ஒன்று உண்டு. பாரதிக்கு நாம் ஆற்றும் கடமையாக அவனது பாடல்களை நகரங்களில் மட்டுமின்றிப் பட்டி தொட்டிகளிலெல்லாம் ஒலிக்கச் செய்வதுதான் அந்தக் காரியம். அழுது வடியும் இசையமைப்பைத் தவிர்த்து மெய்சிலிர்க்க வைக்கின்ற, உணர்ச்சியூட்டக் கூடிய எடுப்பான மெட்டுக்களில், ராகங்களில் இசை அமைத்து ரேடியோ, டெலிவிஷன், இசைத்தட்டுக்கள் வாயிலாகப் பரப்புவதுதான் சிறந்த தொண்டு. அது பாரதிக்குச் செய்யும் கைம்மாறு அல்ல; நமக்கு நாமே செய்து கொள்கிற பேருதவி. எதிர்காலத் தலைவர்களான இன்றைய குழந்தைகளுக்கு நாம் அளிக்கின்ற பெரிய பரிசு.

வீரத்தையும் நல்லறிவையும் உழைப்பார்வத்தையும் தேச பக்தியையும் இறையுணர்வையும் சகோதரத்துவத்தையும் வளர்த்து இளைய சமுதாயத்தை உயர்ந்த சமுதாயமாக்கும் பணி இது. பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளிலும்

1981 நவம்பர் 8
துன்மதி ஐப்பசி 23
மலர்: 40 இதழ்: 15



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

நல்ல குரல்வளம் உள்ளவர்கள் உணர்ச்சியோடு தினம் கால்மணி நேரம் பாட மற்றவர்களைக் கேட்கச் செய்தாலே போதும். இதற்கு அரசு ஊக்கமளிப்பதே பெரிய சாதனை.

மற்றபடி விழாக்கள், சொற்பொழிவுகள், திரைப்படங்கள், நாடகங்கள், நினைவு மண்டபங்கள், பொருட்காட்சிகள், பந்தல்கள், விளம்பரங்கள், போஸ்டர்கள், இத்யாதி இத்யாதி யெல்லாம் பெரும்பாலும் விரயமாகவே போகும். பாரதி புகழிலே இன்றுள்ள தலைவர்கள் குளிர் காய்வதாகவே முடியும்.

நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி
வஞ்சனை சொல்வாரடி — கிளியே
வாய்ச்சொல்லில் வீரரடி

என்று பாரதி இதைத்தான் சொன்னானோ என்று நினைக்கத் தோன்றும்.

பாரதி நூற்றாண்டு விழாவினை மக்கள் மன்றங்கள் ஆங்காங்கே கொண்டாடட்டும்; வேண்டாம் என்று சொல்லவில்லை.

ஆனால் அரசு லட்சம் என்றும் கோடி என்றும் செலவுத்திட்டம் வகுப்பதெல்லாம் நிரந்தரப் பயன் தருவனவாக, வேலை வாய்ப்பையும் நாட்டின் செல்வத்தையும் பெருக்கும் விதமாக அமைதல் வேண்டும்.

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு —குறள்

பொருள்: நீதி பரிபாலனம் செய்வதையும், நாட்டின் செல்வத்தை அதிகப்படுத்துவதையும், செல்வம் சிதையாமல் சேமிப்பதையும், சேமித்த செல்வத்தைத் திட்டமிட்டு வெவ்வேறு பொதுநலக் காரியங்களுக்குப் பகிர்ந்து செலவு செய்வதையும் திறமையுடன் நடத்துகிறவனே நல்ல அரசன்.

---



அருள்குரு

## ஒரு கொடியின் கீழ் ஒன்றுபட்டோம்!

சதாசிவமான பரம்பொருளே ஸ்ரீ சங்கரராக வந்து பிறந்தது. மற்ற யுகங்களில் ஞானோபதேசம் என்பது முழுநேர வேலையாக இல்லை. கிருஷ்ணாவதாரத்தில் அரசகாரியம் பற்றிய பல செயல்களில் கிருஷ்ணன் ஈடுபட்டிருந்ததோடு, தானே ஒரு நாட்டுக்கு அரசனாகவும் இருந்து ஆண்டான். போர்க்களத்தில் கீதையைச் சொன்னது போன்று ஒவ்வொரு நேரத்தில் அறவுரைகளையும், அருளுரைகளையும் வழங்கினான். ஆனால் கலியுகத்தில் இப்படிச் செய்தால் போதாது. தருமம் நலிந்து, அதருமம் மலிந்த இந்த யுகத்தில் முழு நேரமும் தருமத்தை நிலை நாட்டுவதில் செலவிட வேண்டிய தேவை யிருப்பதனால், இதற்கென்றே காலத்தை ஒதுக்கி ஏற்பட்டது ஸ்ரீ சங்கராவதாரம்.

வேறுபட்ட பல மதக் கொள்கைகள் அப்பொழுது நமது தேசத்தில் நிறைந்திருந்து, மக்களின் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தன. தமது வேற்றுமைகளினால் நாட்டையே பல துண்டுகளாக்கி வைத்திருந்தன. பாரதம் முழுவதும் ஒரு நாடு, ஒரு பண்பு, ஓர் உயிர் என்ற எண்ணமே இல்லாமல் தனித் தனியாக மக்கள் பிரிந்து கலைந்து வாழ்வதற்கே இம்மதங்கள் வழி செய்தன. வேதங்கள் சொன்ன ஒற்றுமை வழி, ஒருமை வழி மறந்து போய் விட்டது.

''ஒன்றே சத்தியம்; எல்லாத் தெய்வங்களும் அதன் பெயர்களே; எல்லாச் சமயங்களும் அதையே முடிவாகக் கொண்டவை'' என்ற வேதத்தின் குரல் வெறும் ஆடம்பரச் சண்டைகளில் அமுங்கிப் போய் விட்டிருந்தது. அரசியல் முறையில் பாரத தேசம் பல துண்டுகளாகச் சிதறிக் கிடந்து, பின்னர் ஒரே தேசமாக, ஒரு கொடியின் கீழ் வந்தது எவ்வளவு முக்கியமோ, அதே போல், பல சமயக் கொடிகளின் கீழ் சிதறிக் கிடந்த பாரத தேசத்தைச் சத்தியம் என்கிற கொடியின் கீழ் ஸ்ரீ சங்கரர் ஒன்றுபடுத்தினர்.

—காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# பஸ்ஸிலே கேட்டவை!

“என்ன பாலசந்தர் இப்படிப் பண்ணிப் பிட்டாரே!''

''என்னய்யா செய்துட்டார்?''

''நல்ல மழைக் காலத்திலே போய்த்தண்ணீர் தண்ணீரை ரிலீஸ் பண்ணி யிருக்காரே! யோசனே வேணும்? கடும் கோடையிலே ரிலீஸ் ஆகியிருந்தா அதன் ''இம்பாக்ட்'' அலாதியா இருந்திருக்குமே!''

''நம்ம அமைச்சர்கள்லே ஒருத்தர் தண்ணீர் தண்ணீரைப் பார்த்துட்டு ரொம்ப ஆடிப்போயிட்டாராமே!''

''அதென்ன கதை?''

''எப்படி இதையெல்லாம் சென்ஸாரிலே அனுமதிச்சாங்க? படத்திலே ஆட்சியை இவ்வளவு குறை சொல்லி யிருக்கே'ன்னுராம்! 'ஆட்சியைக் குறை சொன்னாலும் எந்த ஒரு கட்சியையும் குறிப்பிட்டுச் சொல்லலியே'ன்னதுக்கு 'இப்ப ஆட்சியிலே இருக்கிற கட்சியைத்தானே பாதிக்கும்?'னு




ராம்! 'அதுவும் திருப்பத்தூர் தேர்தல் வேறே வருதே'ன்னு அங்கலாய்த்தாராம்!''

''கல்வி அமைச்சர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் நடக்கும் ஆராய்ச்சிகளைக் குறை சொல்லியிருக்காரே, கவனிச்சீரா?''

''பேப்பர்லே பார்த்தேன்; சமுதாயப் பிரக்ஞையே இல்லாமே ஆராய்ச்சிகள் நடக்குதுன்னு சொல்றார். நியாயம்தானே! ஏட்டுச் சுரைக்காய் யாருக்கு வேணும்?''

''அது சரி. ஆனா ஏன் அப்படி ஆராய்ச்சி நடக்கலே? இவன் ஐந்தாண்டுத் திட்டத்தையோ, பொருளாதாரக் கொள்கையையோ குறை சொன்னா ஆளும் கட்சியைக் கண்டிக்கிறதா நினைச்சுக்குவாங்களோன்னு பயம். ஆய்வுக் கட்டுரையை மதிப்பிடுகிறவன் எந்தக் கட்சி அனுதாபியோன்னு கவலே! 'ரீ ஸப்மிட்'டுன்னு ஆய்வைத் திருப்பிட்டா மேலும் ஒரு வருஷம் கால விரயம்; பணச் செலவு. அதனலேதான் வழ வழான்னு ஏதோ எழுதி டாக்டர் பட்டம் வாங்கிடறாங்க!''

''என்ன ஓய்! தர்ப்பணம் ஆச்சா?''

''ஆச்சு சுவாமி! காலம்பற ஆத்துக்கு வந்த சாஸ்திரிகள் உடம்பெல்லாம் ரத்தக் காயம்! என்னன்னு கேட்டா பண்ணி வைக்க டாக்டர் வீட்டுக்குப் போனாராம். வாசல்லேயே விழுந்துட்டாராம்! டாக்டர், 'இதோ கிளினிக்கைத் திறந்துடறேன். கட்டுப் போட்டுண்டு போங்கோன்'னாராம். 'வேண்டாம். ரொம்பப் பேர் காத்திண்டிருப்பா; அபீசுக்கு எல்லாருக்கும் லேட் ஆயிடும். நான் என் ரவுண்டை முடிச்சுண்டு அப்புறமா வரேன்'னு சொல்லிட்டு வந்தாராம்!''

''ஐயோ பாவம்! கடமை உணர்ச்சின்னு இதுதானே ஓய்! என்ன சொல்றீர்!''

''அந்துலே பலே பேர்வழிடா! ஒரு காரியம் பண்ணியிருக்கான்!''

''என்னடா?''

''அவன் பேரிலே கேஸ் நடக்கிறதில்லையா? ஜட்ஜுங்களுக்கெல்லாம் வீட்டு மனே ஒதுக்கறேன்னு சொல்லி சப்ஜாடா எல்லாரையும் தன் வீட்டுக்கு வரவழைச்சு, பட்டா வழங்கியிருக்கான்; ஜட்ஜுங்களோட ஹவுஸிங் சொஸைட்டிக்கு! ஸ்டில் காமிராக்கள் க்ளிக்கின! டெலிவிஷன் காமிரா சுழன்றது!''

''ஜட்ஜுங்க ஹவுஸிங் சொஸைட்டி இருக்கிறதிலேயும் அவங்க வீடு கட்டுறதிலேயும் தப்பில்லே; சொஸைட்டிக்காக நிலம் ஒதுக்கப்பட்டதாலே நீதிபதிகள் நீதி நெறி தவறி நடந்துக்குவாங்கன்னும் சொல்ல முடியாது. இருந்தாலும் அந்துலே மேலே கேஸ் நடக்கும்போது எல்லா ஜட்ஜுங்களும் அவன் வீட்டுக்குப் போய்க் கையேந்தி நிக்கறது சேச்சே... கேட்கவே நல்லால்லே!''

''இது என்ன இருநூறு ரூபாய் டிக்கெட்டாமே! ஏதோ ஒண்ணு வந்திருக்கே!''

''ஒஸிபிஸா! அது ஆப்பிரிக்க சங்கீதம். ரத்தத்தைத் துள்ள வைக்கிற ரிதம். மேடை அலங்காரமே மாட்; ஸைகடெலிக் லைட்டிங் வேறே! சிலையா உட்கார்ந்திருக்கிறதா தீர்மானிச்சு வரவன் கூட சில நிமிஷங்களுக்கு மேலே கூத்தாட ஆரம்பிச்சுடறான். கூட்டத்தைக் கட்டுப்படுத்தப் போலீஸ் படாத பாடு பட்டதாம் டில்லியிலே! ஆப்பிரிக்க டியூனிலே இந்தியா ஸ்பெஷல் என்ன தெரியுமா? ரகுபதி ராகவ ராஜாராம் பஜனே! அதுக்குப் பேரு ஓம் சங்கீதமாம்!''

''பேஷ்! இந்த மாதிரி ஆப்ரிக்க சங்கீதத்தைக் கேட்டு நாம் கூத்தாடினுத்தான் உண்டு. பின்னே விலைவாசி குறைஞ்சதுக்காகவா கூத்தாடப் போறோம்! நோ சான்ஸ்!''

-குட்டிகிருஷ்ணன்



# குமரிப் பெண்ணே! குயிலாளே!

விமலா ரமணி

## 4

சுகன்யாவுக்குக் கோபம் வந்தது. கேவலம் ஓர் அற்பப் பொருள்! கொலுஸு. அதை வாங்கிக் கொண்டு வரத் தெரியவில்லை. இவன் பெரிய மேதாவியாம்! அப்பா புகழ்கிறார். மெச்சுகிறார்! ஸ்தபதியின் வீட்டில் காத்திருந்த நேரம் விடுவிடுவென்று கடைத் தெருவுக்குப் போய் ஒரு கொலுஸு வாங்கிக் கொண்டு வருவதற்கு இவனுக்கு என்ன கேடு?



பெரிசா சதுர்த்தி கொண்டாடப் போறளாம் சதுர்த்தி... இந்த ஞானுவும், அப்பாவுமா ப்ளான் போடறு... போடறு அப்படிப் போடறு! கணபதி ஹோமமாம்... சஹஸ்ர நாமமாம்.... பத்து நாள் உற்சவமாம்! யாருக்கு வேணும் இதெல்லாம்... கட்டிக்கிறதுக்கே ஒரு நல்ல தாவணியோ, புடவையோ கிடையாது... பத்து நாளைக்கு மாத்தி மாத்தி அந்தப் பழசான புடவையையே திருப்பித் திருப்பிக் கட்டிண்டுபோகணும்.... ஒரு புதுக் கொலுஸு கிடையாது. தினம் தினம் இந்தப் பழசைப் போட்டுண்டு இதோட சலங்கையெல்லாம் பாதி பிஞ்சு போயிடுத்து! எத்தனை மாசமாயாச்சு! பத்து ரூபா கொலுஸு எத்தனை நாளைக்கு வரும்? இந்தப் பித்தளைக் கொலுஸுக்காக நான் லொங்கு லொங்குன்னு அக்கரைபோய்க் கடையிலே வாங்கணும்.... அப்பா தனியாவும் அனுப்ப மாட்டார்! தாமும் வரமாட்டார்! இந்தப் பிரம்மஹத்தி ஞானுவை அனுப்பிச்சா அதுவும் 'செக்கே பிக்கே'ன்னு ஏது எதையோ பண்ணிட்டு, கடைசியிலே என்னோட கொலுஸு வாங்க டைம் இல்லேன்னு வந்துடுத்து! பேசாமல் அந்தக் கதையிலே வர சுகன்யா மாதிரி அடுப்பிலே இலுப்பக் கரண்டியைப் போட்டுப் பழுக்கக் காச்சி இவன் உடம்பிலே சூடு போடணும். இவன் கண்ணைப் புடுங்கணும்னு தோணறது! அப்பாவுக்கு வெறும் நாளிலேயே டயம் இருக்காது. இப்போ சதுர்த்தி உற்சவ மும்முரம் வேறே....''

கோபமாகத் தனக்குள் எதை எதையோ முணுமுணுத்தபடி சுகன்யா அந்தப் பிள்ளையாரைச் சுற்றிக் கொண்டிருந்தாள். தூரத்திலிருந்து பார்க்கிறவர்களுக்கு அவள் ஏதோ மந்திரம் சொல்லிக் கொண்டு சுற்றுவது போலத்தான் தெரியும்!

அவன் கிளம்பியபோது அடுத்த தெரு குழந்தைவேல் பையன்... அவன் பெயர்கூட மாணிக்கமோ... மரகதமோ அவனும்... அவனுடன் ஒரு புதியவனும்...

யார் இவன்?

மீசை கருகருவென்று—வளர்ந்திருக்கிறது. காதிலிருந்து கீழ்வரை வெட்டி விடப்பட்ட பட்டணத்து நாகரிக மயிர் புல்வெளி! நெற்றியில் சந்தனப் பொட்டு...

யார் இவன்?

''குமார்ன்... இதுதான் எங்க ஊர்லே இருக்கிற ஒரே கோவில்... புள்ளையார் கோவில்'' — மாணிக்கம் சொன்னான்.

''புள்ளையார் அம்பலத்திலே அம்பாள் தரிசனம் ஆயி!'' — அந்தச் சுகுமாரனே, சுக்குமாரனே சொன்னான்.

சரிதான்... மலையாளத்திலிருந்து வந்திருக்கிறானோ? கேரள நெடி அடிக்கிறதே!

''உஸ்...மெள்ளப் பேசு...கோவில் குருக்க ளய்யாவோட பொண்ணு....''

—மாணிக்கம் சொன்னான்.

கோயிலைச் சுற்றி வரும்போது காதில் விழுந்ததும், விழாததுமான சம்பாஷணை களைக் கவனிக்காதவள் போல் சுகன்யா கோவிலைச் சுற்றிச் சுற்றி வந்து கொண் டிருந்தாள்.

''கன்னிப் பெண்கள் அம்பலத்து அரச மரம் சுற்றுங்கில் அடி வயிறு கனக்கும்! அறியோ?'' — சுகுமாரன் சொன்னான்.

''அடிவயிறு கனக்குதோ இல்லையோ.... இப்போ நீ எங்கிட்டே அடி வாங்கப் போறே!'' —மாணிக்கம் சிரித்தபடி சொன் னான்.

இருவரும் சிரித்தனர்.

ஓ! நண்பர்கள் போலிருக்கிறது! அது தான் இத்தனை உரிமை!

மாணிக்கத்தின் மீது சுகன்யாவுக்கு ஒரு திடீர் மதிப்பு ஏற்பட்டது! தன்னை எத்தனை பெருமையாக அந்த மலையாளத்துக்கார னுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான் மாணிக் கம்!

''கோவில் குருக்கள் ஐயாவோட பொண்ணு....'' — எத்தனை மரியாதை!

தினம் கோவிலை ஒன்பது சுற்று சுற்றுவாள் சுகன்யா. இன்று ஞானுவைத் திட்டிக் கொண்டே சுற்றியதில் எண்ணிக்கை விட்டுப் போயிற்று! கொஞ்சம் அதிகம் சுற்றி விட் டோமோ? என்றுகூட நினைத்தாள் அவள்.

''என்றெ ஜீவிதம் கிராமத்தில் கழி யுங்கில் ஞான் ரொம்ப சந்தோஷப்படும்.'' என்று சுகுமாரன் பேசியதும் அவள் காதில் விழுந்தது.

கடைசிச் சுற்றை முடித்துக் கொண்டு சுகன்யா நமஸ்காரம் பண்ணியபோது அவர்க ளிருவரும் அந்த இடத்தை விட்டுப் போயிருந் தார்கள்.

சுகன்யா வீடு திரும்பினாள்.



## 5

''என்ன சின்னக் குருக்கள் ஐயா... சதுர்த்திக்கு எல்லாம் தடபுடலா ஏற்பாடு பண்றாப்பலே தெரியுது?'' — குழந்தைவேல் கேட்டார்.

''ஏதோ தெய்வ காரியம் நல்லபடியா நடக்கணும்... உங்களை மாதிரிப் பெரியவா மனசு வச்சா வருஷா வருஷம் இன்னும் சிறப்பா நடத்தலாம்.'' — ஞானு பணிவுடன் கூறினான்.

''முதல்லே இக்கரையிலே இருந்து அக்கரை போறதுக்கு ஒரு பாலம் கட்ட ஏற்பாடு பண்ணணும்....''

''ஏன்? பரிசல் போயிண்டுதானே இருக்கு!''

''ஆ! பெரிய பரிசல்.. தொத்தைப்பரிசல்.. பத்துப் பேருக்கு மேலே ஏறினாக் கவுந்துடும்! கண்ட பயலுகளோட சரி சமமா ஒக்காந்துட் டுப் போக வேண்டி இருக்கு! நானும் ஊர்ப் பஞ்சாயித்துப் போர்டிலே சொல்லிட்டுத் தான் வாரேன். ஒரு பயலுவ காதிலே போட்டுக்க மாட்டேங்கறாங்களே! ஆ... ஊன்னு டொனேஷன் கேட்க மட்டும் வந் துடுறாங்க....'' — குழந்தைவேல் குறைப் பட்டுக் கொண்டார்.

''புள்ளையாருக்குப் பண்ற உற்சவச் செலவைக் கொறைச்சிட்டுப் பாலம் கட்ட ஏற்பாடு பண்ணினா இன்னும் நிறையவே தாரேன். ஒரு நல்ல காரா வாங்கிட்டா பாலத்து வழியாவே அடுத்த ஊருக்குப் போயிடலாம்.... ஒரு சமயம், போதுன்னு வெளியூர்போக எத்தனை சிரமமா இருக்குது!''

ஞானு பேசாமல் இருந்தான். பாலம் கட்ட வேண்டியதுதான்! ஊர்க்கார பெரிய மனிதர்களுக்கு ரொம்ப வசதியாக இருக் கும்! அப்புறம் பரிசலை வைத்துக் கொண்டு தன் வாழ்க்கைப் படகை ஓட்டுகிற செல்வி

என்ன பண்ணுவாள்? அவள் வாழ்வே இக்கரைக்கும் அக்கரைக்கும்தானே. அவளுக்கு இவர்கள் பஞ்சாயத்துக் கூட்டி ஏதாவது வழி பண்ணப் போகிறார்களா? பிள்ளையார் காரியத்தைப் பார்த்துக் கொண்டு சும்மாப் போகாமல் நமக்கேன் பாடு? ஊர் வம்பை ஊர்க்காரர்களே பார்த்துக் கொள்வார்கள். நான் வந்தது பிள்ளையாரைப் பார்த்துக் கொள்ளத்தான்! அதோடு என்னுடைய கடமை முடிந்தது. சதுர்த்தி நல்லபடியா நன்றாக நடக்க வேண்டும்...

''இந்தச் சதுர்த்தி விழாவுக்கு நாயனம் ஊதவே வெளியூர்லே இருந்துதான் நாயனக்காரன் வரணும்.''

''அதான் பரிசல் இருக்கே?''

''அதைத்தான் சொல்ல வாரேன்... எல்லாத்துக்கும் அந்த ஒரே பரிசல்.. அது அக்கரை போய்த் திரும்பற வரை நாம காத்திட்டு இருக்கணும். அதுவும் கூட்டம் ஜாஸ்தியானு செவ்வெண்ணெய் கழண்டுடும். கூட ரெண்டு மூணு பரிசலே விடுங்கடான்னு அதையும் கேக்க மாட்டேங்கறானுங்க....''

அவர் புலம்பிக் கொண்டிருந்தார். அவர் பாவம்... வியாதிக்காரர்... அப்படித்தான் புலம்புவார். வைத்தியம், வாணிபம் என்றால் அக்கரை ஓட வேண்டும். இந்தக் கிராமத்தில் வாழவும் முடியாமல், இதை விட்டு ஓடவும் முடியாமல் திண்டாடுகிறார் பாவம்!

அவர் கொடுத்த நூறு ரூபாய் பணத்தை வாங்கிக் கொண்டான் ஞானு. ரசீது கொடுத்தான்.

''பெரியவர் இப்பல்லாம் ஜாஸ்தி வெளியே வருதில்லையா?''

''இல்லே... உடம்பு முடியல்லே... அனேகமா அவரோட எல்லாக் காரியங்களையும் நான்தான் கவனிக்கிறேன்...''

''நல்லதுதான்... ஆமா... அவரோட மகள் சுகன்யாவைத்தானே நீ கட்டிக்கப் போறே?''

ஞானு ஒரு கணம் திடுக்கிட்டான். இது வரை அவன் நினைத்தே பார்க்காத, அப்படியும் ஒரு சாத்தியக்கூறு இருக்கும் என்கிற எண்ணம் இல்லாத நிலையில் இவர் கேட்ட இந்தக் கேள்வி அவனுள் ஒரு பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. ஒரு நிமிடத் தடுமாற்றத்துக்குப் பிறகு—

''அப்படி ஏதுவும் எனக்குத் தெரியல்லே'' என்றான் அடக்கத்துடன்.

''இல்லே தம்பீ... மொதல்லியே அவர் என்கிட்டே சொன்னதுதான். எனக்கு வயசாகுது. முந்தி மாதிரி ஓடியாடி வேலை செய்ய முடியவில்லே. ஒரு நல்ல பையனைப் பார்த்துக் கிராமத்துக்கு வரச் சொல்லி இருக்கேன். எனக்கு அப்புறமா அவனையே கோவில் பூஜைக்கு ஏற்பாடு பண்ணிடுவேன். அவனுக்கும் சம்மதம்னா என் மக சுகன்யாவை அவனுக்கே தந்துட்டா என்னோட ரெண்டு பொறுப்பும் தீர்ந்துடும் — அப்படீன்னாரே! நான்கூட, நல்ல ஏற்பாடு ஐயரே... அப்படியே செய்யுங்கன்னு சொன்னேன். உங்க கிட்டப் பெரியவரு ஒண்ணுமே சொல்லலியா?''

—குழந்தைவேல் சொன்னபோது முதன் முதலாக ஞானு சுகன்யாவைப் பற்றி நினைக்க ஆரம்பித்தான்.

முதன் முதலில் அவளைப் பார்த்தது. தலை நிமிராமல் கோலம் போட்டுக் கொண்டிருந்தவளின் காலில் கொலுசு கண்களுக்குத் தென்பட்டது... அதன் பிறகு?

இவன் சந்தனம் அரைத்தபடி கண்களை மூடிக்கொண்டு மந்திர உச்சாடனம் சொல்லும்போது எதிர்த்தாற் போல அமர்ந்து கொண்டு பூக்களைத் தொடுத்துக் கொண்டிருந்தது. அப்புறம்.... இவனிடம் ஆசையாகக் கொலுசு வாங்கி வரச் சொன்னது...

இப்படி... இப்படி ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தான் ஞானு! அவனுக்கு உடனே சுகன்யாவைப் பார்க்க வேண்டும், பேச வேண்டும் போல் தோன்றியது. (தொடரும்)

---

## பழமையின் காப்பகம்; புதுமையின் ஆய்வகம்

''தஞ்சாவூரின் பழைய சிறப்புக்களையெல்லாம் சரித்திரப் புத்தகங்களிலும் சரித்திர நாவல்களிலும் படித்தாகி விட்டது. இன்றைய சூழ்நிலையைப் பார்த்து இன்றைய பிரச்னைகளையும் அறிந்து வருகிறோம்'' என்று கூறி, எழுத்தாளர்கள் **வாதூலன், சாருகேசி,** ஆகியோரும் புகைப்படக் கலை நிபுணர் **எம்.கே. ராமமூர்த்தியும்** புறப்பட்டார்கள். தஞ்சை நகரில் அவர்கள் நாலைந்து நாட்கள் வளைய வந்ததன் பயனே இந்தச் சிறப்பிதழ். என்னதான் நவீன யுகமானாலும் பழம் கலைகளின் காப்பகமாகவே அதிகப் பெருமை அடைகிறது தஞ்சாவூர். அதையேதான் ஓவியர் மணியம் செல்வனும் மேலட்டையில் சுட்டிக் காட்டுகிறார். கலைகளுக்கு எடுத்துக் காட்டாகப் பாதி உருவாகி முழுமை பெறக் காத்திருக்கும் வீணைகளையும் கைவினைஞர்களையும் ஒரு பக்கமும், வளர்ந்து வரும் விஞ்ஞான அறிவுக்கு எடுத்துக் காட்டாக மருத்துவக் கல்லூரியின் ஒரு தோற்றத்தையும் மாணவிகளையும் இன்னொரு புறமும் வண்ண ஓவியமாகத் தீட்டியிருக்கிறார்.



The fragrance of choice coconuts in every drop.

# Yendelux
## coconut oil



என்டிலக்ஸ்
தேங்காய் எண்ணை

**மு. மு. நாகலிங்க நாடார் சன்ஸ்**

உரிமையாளர்கள் : **ஸ்ரீ நாகலிங்க விலாஸ் ஆயில் மில்ஸ்.** கொல்லம்—கேரளா

போன் : ஆபீஸ் : 2244, 4484, மில்ஸ் : 2266, 4611

---

Trade Enquiries Solicited from wholesale dealers only

● தங்களுடைய தலையங்கத்தைக் கர்நாடக முதல்வர் குண்டுராவ் படித்தாரானால் ''இந்திரா காங்கிரஸ் கட்சி சார்புள்ளவர்களைத்தான் இனி பத்திரிகை ஆசிரியர்களாக நியமிக்க வேண்டும். இவர்களால் தான் பத்திரிகை சுதந்திரம் காப்பாற்றப்பட வேண்டும்'' என்று சொல்லி உங்கள் பதவிக்கே வேட்டு வைக்கப் போகிறார், ஜாக்கிரதை!

கல்பாக்கம் — சி. பி. ராஜு



○ ஜி. கே.

● விமலா ரமணியின் குமரிப் பெண்ணே குயிலாளே தொடர் கதை ஆரம்பமே இனிமையானதொரு கிராமத்துக்குச் சென்றது போல் இதமாக உள்ளது. அடுத்த இதழை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

கோயமுத்தூர்-9 — எஸ். கணேசன்

● நடேச சாஸ்திரியின் மனநிலையை நன்றாகவே சித்திரித்துக் காட்டியுள்ளார் விமலா ரமணி. சுகன்யாவின் மனத்தில் வளரும் கற்பனை தென்றல், ஞானஸ்கந்தனின் அமைதி நிறைந்த உள்ளம் ஆகியவற்றை விவரிக்கும் பாங்கில் விமலா ரமணி மிக மிக உயர்ந்து எங்கள் நெஞ்சங்களைக் கொள்ளை கொண்டு விட்டார்.

சென்னை-44 — ரர்ஜலக்ஷ்மி சங்கரதாஸ்

● 'காதிலே பூ' வுடன் வந்த கல்கி நிறைவைத் தந்ததுடன், அந்நாடகத்தைப் பார்க்கும் ஆவலை அதிகரித்துள்ளது. எங்கள் ஊரில் அந்நாடகம் வர இருந்தது. எஸ்.வி. சேகர் விபத்துக்குள்ளானதால் தள்ளிப் போடப்பட்டுள்ளது. அவரை விரைவில் எங்களை நேரில் மகிழ்விக்க வரும்படி அழைக்கிறேன்.

மதுரை — ஆர்.வி. பிரசாத்

● ஜி. கே. அளித்த ஹாஸ்ய விருந்தை உண்டு வயிறு புண்ணாக விழுந்து விழுந்து சிரித்தோம். எல்லா ''ஸப்ஜெக்டை''யும் டச் பண்ணியிருந்தார். மனுஷர் பொல்லாதவர் போலிருக்கு!

பெல்லாரி — லட்சுமி ராகவன்

● ''காதுல பூ'' ஒரு காகிதப் பூப்போன்று மணமற்றதாக இருக்கும் என்று நினைத்த எனக்கு மல்லிகை மலரை ஞாபகமூட்டி விட்டது. ஜி.கே. சார், இந்தாங்க சென்ட் பர்சன்ட் மார்க்!

நெய்வேலி — கயல்விழி

● ''சோ'' பாணியில் முயன்றிருக்கிறார் ஜி.கே! சிரிப்பு வருமா, வராதா என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே அது, உள்ளுக்குள் அமுங்கி விடுகிறது. நகைச்சுவை நாடகங்கள் வரிசையில் இது சுமார் தான்!

சிறுமுகை — வி. எஸ். கண்ணன்

● ராண்டார்கை செய்த வேண்டாத காரியத்துக்குப் பதிலாக நீங்களும் ஒரு வேண்டாத காரியம் செய்யாமல், வெளியூர் வாசகர்களாகிய எங்களுக்காக அதைச் சகித்துக் கொண்டு, கொஞ்சமும் தயக்கம் இல்லாமல் தொடர்ந்து 'வருவான் ராஜ குமாரன்' என்று அறிவித்தது, கல்கி வாசகர்கள் மேன்மேலும் பெருமை கொள்ளச் செய்கிறது.

கோவை — ஒலிம்பஸ் விக

● டீ.வி. நாடகத்தை வேற்றூர்களில் உள்ளோர் பார்த்திருக்க முடியாது என்று கூறிப் புகழ்பெற்றோர் செய்யும் இருட்டை மன்னிப்போரே! கராச்சி டீ.வி.யில் நான் பார்த்த சினிமா நாடகத்தை அங்குள்ளோர் பார்த்திருக்க முடியாதே — எழுதி அனுப்பினால் பிரசுரிப்பீர்களா?

மதுரை — நூர்

● என்ன ஸார், இந்த வருஷம் 'கடுகு'க்குத் தலை தீபாவளியா? சொல்லாமல் கொள்ளாமல் மாமியார் வீட்டுக்குப் போய்விட்டாரே!

600 035 — சி. பூபால் சிங்

● அது சின்னத் துணுக்குத்தான். எனினும் முதலமைச்சருக்கு வாரிசு இல்லாததை எத்தனை தரக் குறைவாக அரசியல் வாதிகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அரசியல் மேடையை ஆபாச மேடையாக்கிக் கொண்டிருந்தார்கள் என்பதைத் தெளிவு படுத்தி விட்டது. சலனுக்கு நன்றி.

அரகண்டநல்லூர் — கே. பிரதாப சிங்

● இந்திரா காங்கிரசை நம்பித்தான் தமிழ் நாட்டில் தி.மு.க. இருக்கிறது என்பதைப் போலல்லவா 'கலைஞரின் கதி என்ன?' கட்டுரை எழுதியிருக்கிறீர்கள். இந்திரா காங்கிரஸ் ஆட்டம் போட்டால் கடைசியில் மண்ணில் விழ இருப்பது அவர்கள்தான்.

பாண்டமங்கலம் — பூவை கே. சந்திரன்

● ''சினிமா உலகில் தீபாவளி'' ஜோக்ஸ் அத்தனையும் அருமை. அதிலும் ''எனக்கு யானை வெடி கொடுத்தால்தான் சாப்பிடுவேன்'' என்று உசிலை மணி சொல்வதுபோல் அமைந்திருந்ததைப் பார்த்ததும் 'குபுக்' கென்று சிரித்து விட்டேன்.

குலசேகரப்பட்டினம் — வெ. பெருமாள்



# மருத்துவக் கல்லூரி

மிகப் பெரிய பரப்பளவில் (225 ஏக்கர்) பெரிதாகக் காட்சி தருகிறது தஞ்சை மருத்துவக் கல்லூரி. சென்னை ஸ்டான்லி அளவு இங்கும் மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள். 1959ல் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் கட்டடத்துக்கு அடிக்கல் நாட்டினார். 1963லிருந்து இயங்கத் துவங்கியது.

இங்கு எம்.பி.பி. எஸ்ஸுக்கு (4½ ப்ளஸ் 1) பின்னர் 16 விதமான போஸ்ட் கிராஜுவேட் கோர்ஸ்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. தவிர டிப்ளமா கோர்ஸ்களும் உண்டு. ஃபார்மஸி, நர்ஸ் சேவை, குழந்தைப் பேறு, கண் சிகிச்சை இது போன்ற பல வகைகள் இதில் அடக்கம். (கடைசியாகக் குறிப்பிட்ட கோர்ஸ், சமீபத்தில் அரசாங்கம் பிறப்பித்த உத்தரவால் வந்தது) ஏழு ஹாஸ்டல்கள் உள்ளன — ஐந்து மாணவர்களுக்கு; மற்றவை ஹவுஸ் ஸர்ஜன்களுக்கு. ஹாஸ்டல்களின் பெயர்கள் சற்று வேடிக்கை —பாரகன், ஹவுஸ் ஆஃப் லார்ட்ஸ்... இப்படி... படிக்கையிலேயே ஆராய்ச்சியில் தீவிர கவனம் செலுத்தும் பொருட்டு ஊக்கம் அளிக்கப்படுகிறது. குறிப்பிட்ட சிலரைத் தேர்ந்தெடுத்து உதவித் தொகையும் வழங்குகிறார்கள். ஆராய்ச்சிக்கென 'அனிமல் ஹவுஸ்' உண்டு.

இங்குள்ள மாணவர்கள், தஞ்சையை ஒட்டிய மூன்று கிராமங்களுக்கு — வல்லம், பூதலூர், நடுக்காவேரி — 'வேனில்' சென்று சுகாதாரம், நோய்த் தடுப்பு ஆகியவற்றை சொல்லிக்கொடுத்து வருகிறார்கள். குறிப்பாக வல்லம் பகுதியில் யானைக் கால் வியாதி சற்று அதிகம். அந்த நோய் வராது தடுப்பதில் அக்கறை காட்டுகிறார்கள்.

இங்குள்ள டாக்டர் ஜமால் — பிளாஸ்டிக் சர்ஜரி நிபுணர் — இவ்வியாதிக்காக ஓர் ஆபரேஷனைக் கண்டு பிடித்திருக்கிறார். Nodo-Venous Shunt எனப்படும் அவ்வகையில் அதிகமாக இருக்கும் திசுக்களை அகற்றிவிட்டு, பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் சரிப்படுத்திவிடுகிறார். நாலு வருடம் ஆகிறதாம் இந்த முறை கண்டுபிடிக்கப்பட்டு.

கல்லூரியை யொட்டிய ஆஸ்பத்திரியில் எல்லா நவீன டிபார்ட்மெண்டுகளும் இயங்குகின்றன. தோல், எலும்பு முறிவு, 'பீடியாட்ரிக்', எஸ்.டி.டி. எனப்படும் ரகசிய நோய்— எல்லாவற்றுக்கும் தனி டிபார்ட்மெண்டுகள். லேடஸ்ட் அடிஷன் — நியூராலஜி. ஓபன் ஹார்ட் சர்ஜரி செய்கிற வசதிகூட உண்டாம்.

பின், என்னதான் வசதிக் குறைவு இங்கே?

நாம் அறிந்தவரைக்கும் முக்கியமானது, 'ஸ்டீம்லாண்டரி' இல்லாதது; இதன் மூலம் தான் பாக்டீரியாக்களை முற்றும் அழித்து விட முடியும். கான்ஸருக்கான 'கோபால்ட்' தெரபி இல்லை; உடல் பூராவும் சோதித்து அறிந்து கொள்ள நவீன 'ஸ்கேனர்' கிடையாது. ஒரு டாக்டருக்கு லேசாகத் தலை வலித்துக் கொண்டிருந்தது. சாதாரணத் தலைவலி என்று மருந்து சாப்பிட்டாராம். அப்புறம் தற்செயலாகச் சென்னை சென்றபோது மறுபடியும் தலை வலித்ததாம். அங்குள்ள டாக்டரும் சோதித்து, சீரியஸாகஒன்றுமில்லை என்று ஏதோ மாத்திரை தந்திருக்கிறார். அவர் திருப்தி அடையாமல் ஸ்கேனரில் பரிசோதனை செய்து பார்த்துவிடலாம் என்றிருக்கிறார். பார்த்த போது மூளைக் குழாய் வெடித்து லேசாக ரத்தம் சொட்டிக் கொண்டிருப்பது தெரிந்தது! உடனே தக்கபடி சிகிச்சை அளித்துக் குணப்படுத்தி விட்டார்கள். 'ஸ்கேனர்' என்னதான்விலை அதிகமானாலும் உயிர்காக்கும் கருவிக்கு எந்த விலையும் கொடுக்கலாமே!

○ அனாடமி டிபார்ட்மெண்ட் நுழைவாசலில்...



## 19

"ஹரி! தும் ஹரோ ஜனகி பீர்....!''. சாந்தி திடுக்கிட்டுக் கண் விழித்தாள்.

பக்கத்து அறை ஸுஷ்மா டிரான்ஸிஸ்டரைப் பலக்க முடுக்கிவிட்டு அதோடு தானும் பாடிக் கொண்டிருந்தாள்.



சாந்தி சோம்பலுடன் எழுந்து உட்கார்ந்தாள். கட்டிலுக்குப் பக்கத்தில் ஜன்னல் இருந்தது. நாற்சந்தியும் பஸ் ஸ்டாப்பும் சில ஆட்டோ ரிக்ஷாக்களுக்கும் தெரிந்தன. இன்னும் டில்லி முழுசாக விழித்துக்கொள்ளவில்லை, ஒரு மணி நேரத்துக்குப் பிறகு வாகனங்கள் அரக்கப் பரக்க விரைந்து கொண்டிருக்கும், பஸ்ஸில் இடம் கிடைக்காமல் ஆட்டோ ரிக்ஷாக்களைத் தேடிக் கொண்டு பிரயாணிகள் நிற்பார்கள்.

''கூடதே கறுராஜு ராக்ஷோ....''

எம். எஸ்.ஸின் குரலுக்கு இணையாக மேலே போக முடியாமல் ஸுஷ்மாவின் குரல் மூன்று நான்காகப் பிரிந்தது.

சாந்தி தனக்குள் புன்னகைத்தபடி கட்டிலிலிருந்து எழுந்தாள்.

''எனக்குக் கல்யாணம் சாந்தி!'' என்று நேற்றுத்தான் முகமெல்லாம் சிரிப்பாக ஸுஷ்மா தெரிவித்தாள். கண்களில் ஏராளமான கனவுகளும் எதிர்பார்ப்புகளும் தெரிந்தன.

''கங்க்ராஜுலேஷன்ஸ்'' என்று வாழ்த்தும்போது, 'ஓ இத்தனை கனவு காணாதே. அதிகம் எதிர்பார்க்காதே' என்று சொல்லவேண்டும் போலிருந்தது.

அது ஒரு லாட்டரி. அதிர்ஷ்



# அந்தி நேரத்து இதயங்கள்

வாஸந்தி

டச் சீட்டு. உன் பக்கம் விழும் என்று நிச்சயமாக இருக்காதே. ஆண்களின் எதிர் பார்ப்புகள் வித்தியாசமானவை. அவர்களது நியாயங்களும் தர்மங்களும் வித்தியாசமானவை....

'ஹரி... ஹரி.... ஹரி.... தும ஹரோ ஜனகி.... பீர்....''

அவள் சட்டென்று தன்னை உசுப்பிக் கொண்டு எழுந்தாள். மனத்தின் சிந்தனைகள் எல்லாம் ஒரே கோணத்தில் சென்று ஒரே வட்டத்துக்குள் மாட்டிக் கொள்வது வழக்கமாகப் போய்விட்டது என்று அலுப்பேற்பட்டது. எத்தனையோ அலுவல்களுக்கு இடையில் அவசரமாக ஆபரேஷன் தியேட்டருக்கு விரைகையில், பேஷண்டுகளுக்கு உடற்பயிற்சி சொல்லிக் கொடுக்கையில் திடீரென்று முன்னறிவிப்பில்லாமல் நடராஜனின் நினைவு வந்து நின்று எண்ண ஓட்டத்தைத் தடைப்படுத்துகிறது. நான் என்ன தவறு செய்தேன், எதற்கு இத்தனை பெரிய தண்டனை என்கிற ஆத்திரமும் கேள்வியும் சமாதானமாகிற வழியாக இல்லாமல் நேரமில்லாத நேரமெல்லாம் மனத்தில் தோன்றிக் குழப்புகிறது....

''சாந்தி ரெடியா?''

''இதோ பத்து நிமிஷம்!'' அவள் அவசரமாக எழுந்து தன்னைத் தயார் செய்து கொள்ள ஆரம்பித்தாள். இங்கு தங்க ஆரம்பித்ததிலிருந்து வீட்டுப் பொறுப்பே இல்லாமல் நடராஜனின் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லாமல் இருந்தும் மனசில் இனம் புரியாத ஏக்கம் மனத்தை வாட்டுவது ஆச்சரியமாக இருந்தது. ஏதோ நழுவிப்போன மாதிரி... எதிலோ தோற்றுப் போன மாதிரி....

வேறு ஒரு பெண்ணை வீட்டில் அழைத்து வைத்துக் கொண்டிருக்கிறான் என்று ரமா சொன்ன அன்று இரவெல்லாம் தூக்கம் வரவில்லை. எத்தனை கேவலமாக நம்மை ஏமாற்றி விட்டான் என்கிற கோபமும் துக்கமும் அழுகையுமாக வந்தது. மற்றவர்களுக்கு விஷயம் தெரிந்தபோது அவளை விட அதிகமாக ஆத்திரப் பட்டார்கள்.

''இத்தனை மோசமான ஆசாமிக்காக நீ வருத்தப் படறியே, உன்னைவிட அசடு யாருமில்லை'' என்றார்கள்.

''கோர்ட்டுக்குப் போ! டைவோர்ஸ் பண்ணிடு அந்த ஆளை!''

''சாந்தி! நாங்க கிளம்பறோம்!''

சாந்தி அவசரமாகப் பௌடரைச் சரி செய்துகொண்டு கதவைப் பூட்டிக்கொண்டு கிளம்பினாள்.

''சரியான லேட் லத்தீஃப்பாப் போயிட்டே நீ சாந்தி. வீட்டிலேந்து கிளம்பி வரும்போது எங்களை விட முன்னாடி வந்து சேர்ந்துடுவே. இப்ப என்ன ஆயிடுத்து உனக்கு?''

''உன் பாட்டைக் கேட்டு ஸ்தம்பிச்சுப் போயிடறேன் ஸுஷ்மா! அதுக்கப்புறம் கையும் காலும் ஓடறதில்லே!''

சுற்றிலும் 'ஓ'வென்ற சிரிப்பு அலை அலையாய் எழும்புகையில் மனசு சற்று லேசாகப் போயிற்று.

''ஏய், சுஷ்மா! கல்யாணத்துக்கு அப்புறமும் இப்படி அலறிண்டிருக்காதே. ஒரே வாரத்திலே உன் புருஷன் வீட்டுக்கு அனுப்பிடப் போறார்! சாந்தி பட்ட பாட்டிலே நாம எல்லாம் எந்த மூலை?....''

சட்டென்று ஓர் அவமான உணர்வு மனத்தை வியாபித்தது. நம் விஷயம் ஒரு

கேலிக்குரிய பேச்சாகப் போய்விட்டது என்று கூச்சமேற்பட்டது.

அவள் தன் உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டு வேகமாக நடந்தாள்.

''அந்தப் புருஷனுக்காக நீ ஏன் இப்படி உருகறே சாந்தி?''

''நான் உருகறேன்னு யார் சொன்னது?''

''உன் உடம்பு நாலு கே.ஜி. குறைஞ்சிருக்கே நிச்சயமா!''

''அதெல்லாம் உன் கற்பனை லாஷ்மா! நான் அப்படியேதான் இருக்கேன்.''

அவள் அவசரமாக ரீஹாபிலிடேஷன் வார்டுக்குள் நுழைந்தாள். அதுதான் நம்புகலிடம். மனத்தின் துக்கங்களை, ஏக்கங்களைச் சுலபமாக மறக்கச் செய்யும் புகலிடம்.

ரெஜிஸ்டரில் கையெழுத்துப் போடும்போது கைவளை லொட லொடவென்று விழுந்து இடித்தது. அவள் அதைக் கழற்றிக் கவுன் பாக்கெட்டுக்குள் நுழைத்துக்கொண்டாள். உடம்பு இளைத்திருப்பது நன்றாகத் தெரிந்தது. அவளை அறியாமல் உடம்பு இளைக்கிறது. எந்த இழப்புக்காகவோ துக்கம் காக்கிற மாதிரி. இந்த மனத்தின் அசட்டுத்தனம் எப்போது போகும்?

''குட்மார்னிங் நர்ஸ்!''

''குட்மார்னிங் குப்தா ஸாப்!''

''நமஸ்தே சாந்தி பெஹன்!''

''நமஸ்தே ரமேஷ் பையா!''

அவள் அவசரமாக முழு மனசையும் தன்னுடைய பிரத்தியேகமான உலகத்துக்குள் நுழைத்தாள்.

சற்றுத் தொலைவில் ஹரி சக்கர நாற்காலியில் உட்கார்ந்தபடி உடற் பயிற்சி செய்து கொண்டிருந்தான்.

அவளைப் பார்த்துக் கையசைத்தான்.

அவள் புன்னகைத்தபடி தன் வேலையைத் தொடர்ந்தாள்.

அவன் ஓர் அபூர்வமான மனிதன் என்று தோன்றிற்று. எத்தனை எளிமையான பரந்த மனசு அவனுக்கு என்று ஆச்சரிய மேற்பட்டது. திடீரென்று ஏற்பட்டுப் போன உடல் ஊனத்திலும் இடையிடையே மனம் சோர்ந்தாலும் எத்தனை சீக்கிரம் தெளிந்து விடுகிறான்! இவனுக்கு இப்படி ஆனதும் கல்யாணம் நின்றுபோனதும் மாயாவின் துரதிர்ஷ்டம். தப்பே நினைக்காத மனசு, அன்பைப் பொழிகிற மனசு — எத்தனை பேர்களுக்கு இருக்கும்!

அவன்மேல் அன்று தனக்கு ஏற்பட்ட கோபத்தை நினைத்து வெட்கம் ஏற்பட்டது. அன்றைக்கு இருந்த மனநிலையில் எல்லார் மேலும் ஆத்திரம் வந்தது. எல்லார் பேச்சும் தப்பாகப் பட்டது. ஆனால் அப்படிக் கோபப்பட்டதும் நல்லதுக்குத்தான் என்று அவள் நினைத்துக் கொண்டாள். யார் என்ன சொன்னாலும் பேசாமல் இளித்துக் கொண்டு இருக்கும் வகை இல்லை அவள் என்று புரிந்திருக்கும்.

அன்று மாலையே அவன் அவளைப் பார்த்து வெள்ளையாய்ச் சிரித்து 'ஸாரி' என்றது இன்னும் மனத்தில் பசுமையாக நின்றது.

'மனசிலே எந்த மாதிரி எண்ணம் இருந்தாலும் கொட்டிடக் கூடாது'ன்னு புரியறது....'

நம்மைப் பற்றி என்னமாதிரி எண்ணங்கள் இருக்கும் இவனுக்கு?

அவன் அருகில் சென்று அவள் ''குட்மார்னிங்'' என்றாள் மென்முறுவலுடன்.

''வெரி குட்மார்னிங்'' என்று அவன் சிரித்தான்.

''ரொம்ப உற்சாகமா இருக்கீங்களே இன்னிக்கு!''

''என்னைவிட உற்காகமா யார் இருக்க முடியும்?''

அவள் லேசான அதிர்வுடன் அவனைப் பார்த்தாள். தோளில் கையை வைத்தாள்.

''வாஸ்தவத்திலே உங்க காலைப் பத்தின நினைப்பே எனக்கு வரதில்லே ஹரி.''

''எனக்கே நினைப்பு இல்லே — அது இயங்கினத்தானே ஞாபகத்திலே நிற்கும்?''

''மனசு ஒண்ணு நல்லபடியா இயங்கிறப் போதும் ஹரி!''

''அட்ரா சக்கை! பின்னே என்னோட தங்க உங்களுக்கு என்ன ஆட்சேபணை? நல்ல காம்பினேஷனா இருக்குமே? நீங்க என் உடம்பைப் பாதுகாக்க நான் உங்க மனசைப் பாதுகாக்க.... யாரும் எதுவும் சொல்ல சான்ஸே இல்லே. எனக்காக நியமிக்கப்பட்டிருக்கும் நர்ஸ் நீங்கன்னு சொல்லிக்கலாம்.....!''

அவள் சிரித்துக் கொண்டே அவனுடைய கால்களை நீட்டி காலிப்பரைப் பொருத்தினாள்.

''வேண்டாம், என்று அதுக்கு அவசியமே இல்லே.''

சட்டென்று அவள் ஒரு மௌனத்தில் ஆழ்ந்தாள்.

இரும்புச் சட்டங்களைப் பிடித்தபடி நடக்க அவள் அவனுக்கு உதவினாள்.

அவன் வெகு தீவிரத்துடன் ஒரு முனைப்புடன் நடை பழகுவதைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

அவனுக்கு நெற்றியில் வியர்வை அரும்பிற்று.

---

### கண் கொள்ளாக்காட்சி!

ஸ்ரீ குரு ஜோஸிராம் கோஸ்வாமி மடம் எல்லையம்மன் கோவில் தெருவில் இருக்கிறது. சிவாஜியின் குரு ஸமர்த்த ராமதாஸரின் சிஷ்யர் ஒருவரால் சுமார் 300 வருஷங்களுக்கு முன் தஞ்சாவூரில் நிறுவப்பட்டு, ஒவ்வொரு வருஷமும் ஸ்ரீராம நவமி உத்ஸவம் நன்றாக நடந்து வருகிறது.

இந்த மடத்தில் வைஷ்ணவ ஸ்தலங்கள் 108லுமுள்ள மூர்த்தி ஒவ்வொருவருக்கும் ''தஞ்சாவூர் பாணி''யில் அழகான சிறுபடங்கள் தயார்செய்து அவற்றை ஒரே கண்ணாடி பிரேமில் வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஸ்தலத்தின் பெயரும் குறிப்பிட்டிருக்கிறது. இது அரிய கண் கொள்ளாக்காட்சியாக இருக்கிறது.

-த. இரா. இராஜகோபாலன்



# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரை வளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TM

''இந்த மாதிரி அடி மேலே அடி வைத்து நான் என்ன சாதிக்கப் போறேன் சாந்தி?''

''எல்லோரும் ஓட்டப் பந்தயத்திலே ஓட வேண்டிய அவசியமில்லே ஹரி... உட்கார்ந்த படியே மத்தவங்க ஓடறதைப் பார்க்கறதும் நல்ல பொழுதுபோக்கு!''

''உங்க மண்டையை ஒரு மொத்து மொத்தினு அதுவும் நல்லா இருக்கும் தெரியுமா?''

அவள் சிரித்தாள். மெல்ல அவனை மறுபடி சக்கர நாற்காலிக்கு அழைத்து வந்தாள்.

அவன் நெற்றியை அழுத்தித் துடைத்துக் கொண்டான். ''டாக்டர் என்னை இன்னும் பத்து நாள்லே டிஸ்சார்ஜ் பண்ணப் போறதாச் சொன்னர் தெரியுமோ?''

''தெரியும், அதுக்கப்புறம் நீங்க வாரா வாரம் செக்கப்புக்கு வரணும் கொஞ்ச காலத்துக்கு.''

''அதைத் தவிர என் வீட்டுக்கு நீங்க வர மாட்டீங்களா என்னைப் பார்க்க?''

அவள் ஒரு விநாடி அவனைத் தீர்க்கமாகப் பார்த்தாள்.

''கண்டிப்பா வருவேன்!''

''ஒரு காரோ,ஸ்கூட்டரோ வாங்கிடுங்க!''

''ஏன், பஸ்ஸிலே வரக்கூடாதா உங்களைப் பார்க்க?''

''பஸ்ஸிலே வந்தா எனக்கு லாபமில்லே!''

அவள் குழப்பத்துடன் அவனைப் பார்த்தாள்.

அவன் சிரித்தான்.

''நான் பெட்ரோல் பங்க் வைக்கப் போறேன்!''

அவள் சட்டென்று சிரித்தாள்.

''வியாபார குணம் இப்பவே வந்தாச்சு!''

''அந்தக் குணம் எனக்கில்லே. உங்களுக்குத்தான். ரொம்பக் கணக்குப் பார்க்க றீங்க!''

**ப**த்து நாட்கள் என்பது வெகுதூரத்தில் இருக்கவில்லை. திரும்பிப் பார்ப்பதற்குள் வந்து நின்றபோது உண்மையில் அவளுக்குத் திக்கென்றிருந்தது. அந்த ரீஹாபிலிடேஷன் வார்டின் ஓர் அங்கமாக அவன் ஆகிவிட்டிருந்தது புரிந்தது. அவன் ஏதோ தன் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளப் பார்க்கிற வன் மாதிரி ஒவ்வொரு படுக்கைக்குப் பக்கத்திலும் சக்கர நாற்காலியை நகர்த்தி உட்கார்ந்து மணிக் கணக்காகப் பேசினன். டாக்டர் வர்மா கண்டிப்பாக ஸ்ட்ரெச்சரில் யாரையும் வீட்டுக்கு அனுப்ப மாட்டார் என்று தைரியம் சொன்னன். தன்னுடைய எதிர்காலத்தைப் பற்றின கவலையே அவனுக்கு இல்லையென்று அவள் நினைத்துக்கொண்டாள். எப்படிப்பட்ட அபூர்வமான மனிதன் இவன்?

காலையிலிருந்து ஏதோ ஒரு வேதனை மனத்தை அரித்தது. மிக ஆப்தமான ஒரு ஜீவன் பிரியும் நேரத்தை நெருங்கிய மாதிரி. இந்த மாதிரி முட்டாள் தனமான ஸெண்டிமெண்ட் நமக்குள் எப்படி நுழைந்தது என்று அவளுள் திகைப்பேற்பட்டது; வெட்கமேற்பட்டது. அவள் டியூட்டி முடிந்து கிளம்பும்போது அவன் அவள் கைகளைத் தன் கைக்குள் வைத்துக் கொண்டான். நிர்மலமாகப் புன்னகைத்தான்.

''சாந்தி, உங்களுக்கு என் ஸ்பெஷல் தாங்க்ஸ். நான் இப்பப் பாதி ஆளாவாவது இருக்கறதுக்கு நீங்கதான் காரணம்.''

அவள் தன் உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டு சிரித்தாள்.

''பாதி ஆள்தானு இன்னும்? முழு ஆள் ஆகவேண்டாமா?''

''அதுக்கெல்லாம் நான் ஆசைப்படக் கூடாதுன்னு வெச்சிருக்கேன். மத்தவங்களுடைய ஒத்துழைப்பை வரம்புக்கு மீறி எதிர் பார்க்கக் கூடாதுன்னு புரிஞ்சுண்டிருக்கேன்! பாதி ஆளா இருந்தா என்ன? நீங்க சொன்ன மாதிரி இந்தச் சக்கர நாற்காலியிலே உட்கார்ந்தபடி உலகத்தைப் பார்க்கறதும் ஒரு நல்ல பொழுது போக்கு!''

அவளுக்குள் கண்களில் நீர் துளிர்க்கப் பார்த்தது. சட்டென்று உள்ளுக்குள் இழுத்துக்கொண்டாள்.

''சாந்தி ஆறரை மணிக்கு மோகன் என்னை அழைச்சிண்டு போக வருவான். அந்தச் சமயத்திலே வர்றீங்களா?''

''வறேன்.''

அவள் ஹாஸ்டலுக்குச் சென்று டீயும் டிபனும் சாப்பிட்டு விட்டுக் குளிக்கச் சென்றாள். ஷவருக்கு அடியில் நிற்கையில் கண்களிலிருந்து அர்த்தமில்லாமல் நீர் வழிந்தது. இந்தக் கண்ணீருக்கும் மனசுக்கும் விவஸ்தையில்லாமல் போய்விட்டது என்று தோன்றிற்று.

அவள் புடவை கட்டித் தன்னை அலங்கரித்துக்கொண்டு ஹாஸ்டல் படியிறங்கி ஆஸ்பத்திரியை நோக்கி நடக்க யத்தனிக்கையில் திடுக்கிட்டு நின்றாள்.

நடராஜன் நின்றிருந்தான் மிக லேசான புன்னகையுடன்.

''உன்னைத் தேடிக்கிட்டுத்தான் வந்தேன் சாந்தி'' என்றான். பிறகு தலையைக் குனிந்தபடி, ''என்னை மன்னிச்சுக்க. தயவு செய்து வீட்டுக்கு வா'' என்றான்.

அவள் அதிர்ந்து போனாள்.

(தொடரும்)

---

**தஞ்சையிலுள்ள நவீன ஆலை, சூரிய சக்தியில் நெல் உலர்த்தும் ஆலை—தமிழகத்தில் முதலாவது ஆகும்.**

-வசந்தா கோவிந்தன்



# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!

**நைஸில்**
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர.

2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'




**வாங்குவீர் நைஸில்.**
**விரட்டுவீர்**
**வியர்க்குருவை.**
**பால்கம் பவுடரைவிட**
**குறைந்த விலையில்!**



மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

GN-79-PR-TM

# 30 நாள் குழந்தையுடன் 30 நிமிடங்கள்...



✖ தமிழக முதல்வர், தமிழ்ப் பல்கலைக் கழகத்தைத் துவக்கி வைக்கிறார்.

தஞ்சை மாநகரில் சென்ற செப்டம்பர் மாதம் பதினைந்தாம் தேதியன்று தமிழ்ப் பல்கலைக் கழகம் என்ற குழந்தை பிறந்தது. சரியாக முப்பது நாட்கள் கழித்து அதைக் காணச் சென்றேன். குழந்தையின் 'செவிலித் தாயார்' துணைவேந்தர் பேராசிரியர் வி. ஐ. சுப்பிரமணியம், 'மழலை'யின் சார்பில் பேசினார்.

''இந்த ஒரு மாதத்தில் தமிழ்ப் பல்கலைக் கழகம் எவ்வளவு முன்னேறியிருக்கிறது?''

''ஓ!... முப்பது நாட்களுக்குள் எவ்வளவு முன்னேற்றத்தை எதிர்பார்க்கிறீர்கள்? சொல்லுங்கள் பார்க்கலாம்!....'' என்று பதில் கேள்வியோடு ஆரம்பித்த துணைவேந்தர் முப்பது நாட்களுக்குள் நிறையவே, செய்திருக்கிறார்.

தஞ்சை அரண்மனையின் ஒரு பகுதியில் தற்சமயம் இயங்கி வருகிறது — பல்கலைக் கழகம். புதுப்பிக்கப்பட்டுள்ள மிக உயரமான, விசாலமான அறையில், உயரமான தோற்றமும், விசாலமான உள்ளமும் படைத்த துணைவேந்தர் செங்கோல் ஓச்சுகிறார்.

பெரு நகரங்கள் பல கண்டுள்ள துணைவேந்தர் தஞ்சையைப் பற்றி என்ன நினைக்கிறார்?

''மகோன்னதமான சரித்திரம் பெற்றுள்ள தஞ்சாவூர், மிக உயர்ந்த ஆராய்ச்சிக் களமாக விளங்கப் போகும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை ஏற்றுக் கொள்வதற்குத் தன்னைத் தயார் செய்து கொள்ள வேண்டும்! பல்கலைக் கழகம் அமைவதற்கு மிகவும் ஏற்ற இடம் இது. தமிழும் தமிழ்க் கலைகளும் தமிழ்ப் பண்பாடும் செழித்து வளரும் இடம் இது. தமிழ்ப் பல்கலைக் கழகம் இவற்றில் ஒரு புதுமைப் பொலிவைச் சேர்க்கப் போகிறது. வெளி நாடுகளிலிருந்து ஆராய்ச்சியாளர்கள் வருவார்கள். அவர்களுக்கு ஏற்ற வசதிகள் அமைத்துத் தர வேண்டும். புத்தக சாலைகள் வேண்டும். குடியிருப்புகள் வேண்டும்.....''

அவரது சில ஆணித்தரமான கருத்துக்கள்:

தொழில் துறைமுன்னேற்றம் கண்ட நாடுகளில் எல்லாம் கல்விப் பயிற்சி தாய்மொழி மூலமே நடைபெறுகிறது. நேற்றைய நாடு கொரியாவை எடுத்துக்கொள்ளுங்கள். எலக்ட்ரானிக்ஸில் எவ்வளவு முன்னேற்றம்! அங்கே தாய்மொழிக் கல்வி. நம்முடைய தமிழால் கட்டாயம் முடியும்.

''தீண்டாமை என்பது ஏதோ நம் நாட்டில் குறிப்பாக இந்து மதத்தில் மட்டுமே இருப்பதாகச் சிலர் முழங்கி வருகிறார்கள். ஜப்பான், பர்மா, திபேத் ஆகிய நாடுகளிலும் தீண்டாமை இருக்கிறது. அண்மையில் Nippon antiquery என்ற புத்தகத்தைப்




## ஆங்கிலம் கற்பித்த பள்ளி!

தஞ்சையில் வடக்கு ராஜ வீதியில் உள்ள தூயபேதுரு பள்ளிதான் இந்தியாவிலேயே முதன் முதலாக இந்தியர்களுக்கு ''ஆங்கிலம்'' கற்பித்த பள்ளியாக கருதப்படுகின்றது. இது ஸ்வார்ச் பாதிரியாரால் 1784 ஆம் வருடம் ஆரம்பிக்கப்பட்டது. இப்பள்ளிக்கு மன்னர் சரபோஜி, ஸ்வார்ச் பாதிரியார் இருந்த பொழுது மானியங்கள் அளித்துள்ளார். இப்பொழுதும் தமிழக அரசின் ஸ்வார்ச் கட்டளையை இப்பள்ளி பெறுகின்றது. மேலும் இப்பள்ளி தமிழறிஞர் புனித ஜி.யு போப் அவர்களின் ஆதரவையும் அவரின் முயற்சிகளையும் பெற்றுள்ளது. -எஸ். பாலசுப்பிரமணியன்

(ஆதாரம்: பள்ளி கையேடு)

---

படித்தேன். தோல் வேலை செய்யும் இனத்தைச் சேர்ந்த சுமார் இரண்டரை லட்சம் ஜப்பானியர் மிகவும் முன்னேறி விட்ட நிலையிலும் பொது நீரோட்டத்தில் கலந்து கொள்ள விரும்பாமல் தம்மை ஒதுக்கப்பட்டவர்களாகவே கட்டுப்பாடு செய்து கொண்டு அரசு சலுகைகளை அனுபவித்து வருகிறார்களாம். நமது நாட்டில் தீண்டாமை ஒழிப்பு முக்கியமான பணிதான். அதற்காக ஒரு சாராரையே — இந்து மதத்தினரையே — குற்றம் சாட்டுவது பொருத்தமானதாக இல்லை. பொருளாதார நிலையிலும் வேலைவாய்ப்பிலும் பின்தங்கிய நிலையே தீண்டாமைக்கு அடிப்படை. இதற்கும் மதத்துக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை.

''மொழி மட்டுமல்லாமல், மொழி சார்ந்த கலைகளையும் வளர்க்கும் விரிந்த செயல் திறன் உடைய இடமாகப் பல்கலைக் கழகம் விளங்க வேண்டும் என்று விரும்புகிறேன்....''

பல்கலைக் கழகத்துக்குச் சட்ட ரீதியான உருவ அமைப்பு ஏற்படும் வரையில் — பல் துறை அறிஞர்களின் அபிப்பிராயங்களையும் ஆலோசனைகளையும் சேகரித்து வருகிறார். ('நானாகச் செய்து விட்டேன் என்ற கருத்து தோன்றக் கூடாதல்லவா?')

துணைவேந்தரின் தலையெழுத்துக்களான வி.ஐ. என்பன வடசேரி ஐயன் பெருமாள் என்பவற்றின் முதல் எழுத்துக்களாம். கன்னியாகுமரி மாவட்டத்து வடசேரி.

''சார் வி.ஐ. என்றால் 'வெரி இம்பார்ட்டண்ட்'' என்றார் துணையாளர். ஆனால் நமக்கோ. வெரி இண்டலக்சுவல் என்று சொல்லத் தோன்றுகிறது — டி.எஸ்.கே.

புகைப்படங்கள் : ரவிவடி.

எஸ்.பி.எஸ். தஞ்சை



⌘ தமிழ் ஆராய்ச்சிக்கு நுழை வாயில்



⌘ துணைவேந்தர் பேராசிரியர் வி.ஐ. சுப்பிரமணியம்

# வருவான் ராஜகுமாரன்

ராண்டார் கை

## 6

கிரிஷ் தன் கால்களைப் பரப்பி வைத்துக் கொண்டு ப்ரியாவுக்கு வெகு அருகில் வந்து நின்றான். அவன் நின்ற முறை அவன் உடல் அமைப்பு, அவன் ஆண்மையின் ஆதிக்கம் – இவையெல்லாம் சேர்ந்து ப்ரியாவின் உடலில் ஒரு சுகமான வெப்பத்தை உண்டாக்கியது.

''ப்ரியா.... ஒன்னு ரெண்டு முக்கியமான விஷயம் – அது என்னன்னு நானே சொல்றேன்....'' கிரிஷ் இப்போது இன்னும் நெருக்கமாகத் தெரிந்தான். அவன் கண்கள் விரல்களாக மாறி அவளை எங்கெங்கோ தொட்டது போல் ஓர் உணர்ச்சி....

''ப்ரியா பேங்க் அக்கௌண்ட் மம்மி பேர்லே இருக்கு. இன்னிக்கு நானும் டாக்டரும் போயி பேங்க் மானேஜரைப் பார்த்துப் பேசினோம். அந்த ஆளு என்னடான்னா என்னமோ ரூலு ரூலுன்னு ரீலு விடறான். என்னமோ கோர்ட்டுக்குப் போணுமாம்... என்னமோ வாங்கணுமாம்.. ரொம்ப பேஜார் புடிச்ச வேலையா இருக்கும் போல இருக்கு. ஆனா நம்ம டாக்டருக்கு எல்லாமே தெரியும்.''

''நம்ம வக்கீல் செய்யற வேலைன்னா அது!''

''அப்படிச் சொல்லு ப்ரியா. அதைத் தான் நான் சொல்ல வந்தேன். நீ முந்திண்டே. நம்ம வக்கீல் இருக்காரே, சாரி. அவர் பேரு எனக்கு ஞாபகமே வர மாட்டேங்குது. அப்பா! அவருக்கு எவ்வளவு நீளமான பேரு!.... ப்ரியா, அந்த ப்ளேன் ஆக்ஸிடெண்டுக்கப்புறம் என் ஞாபகசக்தியே போய்விட்டது. ம்... மம்மிதான் ஒன்கிட்ட எல்லாத்தையும் சொல்லி யிருப்பாங்களே!''

ப்ரியா தலையைச் சற்றுப் பலமாகவே ஆட்டினாள்.

''ப்ரியா உடனே நீ ஒன்னு பண்ணு. அந்த சாரி.. அவர் பேரென்ன....''

''மீஞ்சூர் கோவிந்தராஜா சாரி.''

''அப்பாடா! இதைவிட நீளமான பேரு கிடைக்கல்லயா அந்த ஆளுக்கு? ப்ரியா நீ அவரோட ஒரு அப்பாய்ண்ட்மெண்ட் ஃபிக்ஸ் பண்ணிக்கோ... சீக்ரமா அந்த பேங்க் அக்கவுண்ட், அந்தச் சமாசாரம் எல்லாத்தையும் நம்ம பேர்லே மாத்தறத்துக்கு ஏற்பாடு பண்ணச் சொல்லு. ப்ரியா நம்ம கல்யாணத்துக்குப் பணம் வேணும்... அப்பறம் நம்ம டாக்டரு நம்ம ரெண்டு பேரையும் ஒரு மாசம் எங்கேயாவது ட்ரிப் அடிச்சுட்டு வரச் சொன்னாரு. ஹனிமூன்னு வெச்சுப்பமே!'' சிரித்துக் கொண்டே அவன் தன் ஒட்டிய அடிவயிற்றைத் தட்டிக்கொண்டான். அவன் விரல்கள் அடர்த்தியாக வளர்ந்திருந்த முடியுடன் விளையாடத் தொடங்கின. அதைப் பார்த்த அவள் கண்கள் அந்த ஆட்டத்தை விட்டு அகல மறுத்தன.

''அதான் விஷயம் ப்ரியா. நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன். எல்லாத்தையும் விட முக்கியமானது நம்ம கல்யாணம். எவ்வளவு சீக்கிரமா வெச்சுக்க முடியுமோ செஞ்சிடுவோம். அதனாலே நான் வெளியிலே தங்குவேன் அப்படீங்கற பேச்செல்லாம் வேண்டாம். ப்ரியா இது ஒன் ஆஃபீஸில்ல... வீடு. நான் திரும்பி வரத்துக்கு முன்னாடியே நீ இங்கு வந்தாச்சு. தனியா இருந்த மம்மியை அவ்வளவு நல்லாக் கவனிச்சுக்கிட்டியாம். டாக்டர் சொன்னாரு... மம்மியும் நீதான் எல்லாங்கற மாதிரி என்னிடம் பேசினாங்க. எல்லாமே ஒனக்குத்தான் சொந்தம்னு எழுதியும் வெச்சாங்க. சொல்லப் போனா இன்னும் கொஞ்ச நாள்லே நானே உனக்குச்சொந்தமாகப் போறேனே!'' – கிரிஷ் பலமாகச் சிரித்தான். அந்த இரவின் அமைதியில் அவன் சிரிப்பின் ஒலி இடி போல் இருந்தது.

''ப்ரியா நீ பதிலே பேச வேண்டாம். இனிமே நீ இந்த வீட்டை விட்டுப் போறதுங்கறது நடக்காது. என்னடாது இவ்வளவு பெரிய பங்களாவிலே நாம ஒரு ஆம்பிள்ளையோட தனியா இருக்கோம்னு நெனைக்கிறியா... ப்ரியா நான் ஒரு ஆர்மி மேன். ஆர்மி டிஸிப்ளின்னு நீ கேள்விப்பட்டிருப்பேன்னு நெனைக்கிறேன். அது எங்கிட்ட நெறையவே இருக்கு. அதனாலே ஒனக்கு எந்த விதமான பயமும் வேண்டாம். இங்கே நீ ரொம்ப ஸேப்... டோண்ட் வொர்ரி...'' கிரிஷ் குனிந்து அவள் முதுகில் தட்டினான். அவளுக்கு உடலெங்கும்



சிலிர்ப்பு. தட்டிய கைகள் தடவ ஆரம்பித்தன. அவள் தடை போடும் நிலையில் இல்லை. ஆணின் விரல்கள் சிலந்திகளாக மாறி அவள் உடம்பில் பல இடங்களில் கூடு கட்ட ஆரம்பித்தன. வடக்கை நோக்கிச் சில சிலந்திகள், தெற்கே நோக்கிச் சில. இப்படி அவளை எங்கும் ஆக்கிரமித்துக் கொண்டன. அவளால் தப்ப முடியாத நிலை. தப்பிவிட வேண்டும் என்ற எண்ணமும் இல்லை.

''ப்ரியா.... யூ ஆர் லவ்லி... எவ்ரி வேர்.''

அவள் வலது காதை ஈரமாக்கிக் கொண்டே இன்னும் இறுக்க அணைத்தான்.

இப்போது அவள் கைவிரல்கள் அவளிடமிருந்து விடைபெற்று அவனிடம் எதையோ தேடத் தொடங்கி விட்டன.

''ப்ரியா.... ப்ரியா....என்னாலெ.... என்னாலெ....
அதற்கு மேல் அவனால் பேச முடியவில்லை. பேசவேண்டிய நிலையிலும் அவன் இல்லை. அந்த எல்லையைக் கடந்து அவள் மேலே தாவ ஆரம்பித்தான்.

''நோ... கிரிஷ் வேண்டாம்...'' அவன் அணைப்பிலிருந்து ப்ரியா விலகிக் கொண்டாள். ''நீங்க இங்கிருந்து போயிடுங்க. ஓங்க அறைக்கு. இங்கேயே இருந்தீங்கன்னா... ப்ளீஸ்....''

''ப்ரியா எனக்குப் புரியுது. கலியாணத்துக்கப்பறம் நம்ம வாழ்க்கையே இதுவாகத் தானே இருக்கப் போகுது. அவசரப்பட வேண்டாம்னு சொல்றே இல்லியா...'' ஐ அக்ரி.''

ப்ரியா முணுமுணுத்தாள்.

''ப்ரியா இப்ப நடந்ததைப் பத்தி எனக்கு வருத்தமே இல்லே. சொல்லப்போனுல் நம்ம ரெண்டு பேரும் இந்தச் சில நிமிஷங்களிலே ரொம்பக் க்ளோஸா வந்துட்டோம் இல்லியா...அப்ப நான் என் அறைக்குப் போறேன். நீ காலேலே நம்ம வக்கீலுக்கு போன் பண்ணி அவர் வேலையை ஆரம்பிக்கச் சொல்லு.''

''சரி. அப்படியே செய்யறேன்.''

''குட் கேர்ள். ப்ரியா முக்கியமா அந்த பேங்க் சமாசாரம். அதை வெச்சுத்தான் நாம மீதியெல்லாம் செய்யணும். ஸோ அதை முதல்லே செய்யச் சொல்லு.''

''சரி. அப்படியே ஆகட்டும். நீங்க கிளம்புங்க.''

''என்ன ப்ரியா இன்னும் டூ செகண்ட்ஸ் நின்னு கழுத்தைப் பிடிச்சுத் தள்ளிடுவே போலிருக்கே. அதுவும் கணவனு வரப் போறவனை!'' — அவள் மூக்கை நன்ருகத் திருகிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் வெளியில் சென்று விட்டான்.

ப்ரியா எழுந்திருக்கும்போதே மணி 8-10 ஆகிவிட்டது. அவள் அவ்வளவு நேரம் தூங்கியதே இல்லை. இதை நினைத்துப் பார்க்கும்போது சந்தோஷம் அவள் மனத்தில் வேரூன்றி அவள் முகத்தில் சிரிப்பாக மலர்ந்தது. வாஷ் பேஸினுக்கருகில் பல் தேய்க்கும் பொழுது கண்ணுடியில் பார்த்துக்கொண்டு அடிக்கடி சிரித்தாள். பற்பசையின் செவ்வண்ண நுரை அவள் வாய்க்குள் மூலைகளில் புகுந்து விளையாடியபோது அவளுக்கு இரவின் இனிமையான சம்பவங்கள் திரைப்படம் போல் மனத்தில் ஓட ஆரம்பித்தன. கிரிஷ்! ஆண்மையின் இருப்பிடமான ஒருவன் தனக்குச் சொந்தமாகப் போகிருன் என்ற எண்ணமே அவளைக் கிளுகிளுக்கச் செய்தது. தன் பற்களின் அழகை ரசிக்கக் கண்ணுடிக்கருகே இன்னும் சற்றுக் குனிந்தாள். அப்போது அவள் பார்வை நீல நிற டூத் ப்ரஷைப் பிடித்துக் கொண்டிருந்த தன் விரல்களின் மேல் பட்டது. அவள் விரல்கள்! அவைகளுக்குத்தான் எத்தனை தைரியம்!... ஆர்வம்...! தன் விரல்களுக்கே இப்படியென்றுல்.....''

கிரிஷ் காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு வெளியில் சென்றுவிட்டான். அவனை வழியனுப்பிவிட்டு வெகு நேரம் ஷவரில் குளித்தாள். தன் உடல் அழகை அவள் எப்போதும் ரசித்ததில்லை. அன்று அதைச் செய்தாள். கிரிஷ் அவள் காதில்கிசுகிசுத்த வார்த்தைகள் மீண்டும் மீண்டும் ஒலித்து அவள் கரம் பட்ட அங்கங்களில் ஒளியை ஏற்றி விட்டன. கிரிஷின் வார்த்தைகளை விட அவன் விரல்களில்தான் எத்தனை இனிமை!.... இளமை.. விரல்களே இப்படி யென்றுல்....

அவள் கிரிஷ் கொடுத்த வேலைகளைக் கவனிக்கத் தயாராகும்போது மணி ஒன்பது ஆகிவிட்டது. காலையில் எழுந்த உடனே கோவிந்தராஜாச்சாரிக்கு ஃபோன் செய்து அவரைப் பார்க்கும் நேரத்தை ஏற்பாடு செய்ய வேண்டும் என்று எண்ணியிருந்தாள். ஆனுல் மறந்து விட்டாள். இப்படி அவள் மறப்பது இதுதான் முதல் தடவை. சாரிக்கு ஃபோன் செய்யும்போது தன் மறதியை நினைத்துச் சிரித்துக் கொண்டாள்.

''ஹலோ மிஸ்டர் கோவிந்தாராஜாச்சாரி?.... ஸார் நான்தான் ப்ரியா பேசறேன் ஸார்... மிஸஸ் பார்வதி வீட்டிலிருந்து...''

''ஹலோ ப்ரியா நான்தான் பேசறேன். எப்டியம்மா இருக்கே? சௌக்கியம்தானே? ஒன்ஹுடை..... ம்..... கிரிஷ் எப்படி?''

''சௌக்கியமா இருக்கார்ஸார். தேங்க்யூ. மார்னிங்கே வெளியே போயிட்டார். ஸார், நான் ஒங்களை ஒடனே பார்க்கணும். எப்ப வரலாம்.... அதான் ஸார் மம்மி வில்லு விஷயமாத்தான். அவர் ரொம்ப அவசரப் படுறூர். எப்ப மீட் பண்ணலாம்?''

''ப்ரியா.... ம்..... இன்னிக்கி நான் கோர்ட்டுக்குப் போகலே. வீட்டிலேதான் இருப்பேன். கால்லே ஒரு கட்டி. ரொம்ப நோகிறது. நடக்கவே முடிலே... நீ வந்து... ப்ரியா... செத்த இரு. என் டைரியிலே செக் பண்றேன்... வந்து.... வந்து.... நாலு மணிக்கு யாரோ க்ளையண்ட்ஸ் வரா. நீ வந்து ப்ரியா ஒரு ரெண்டரை மணிக்கு வந்துடு.... சாப்புட்டுட்டு!''

''ஸார் ஒங்க தூக்கம்?''

''என்னது தூக்கமா? என்ன ப்ரியா நான் கிழவனுயிட்டேன்னு சொல்லிக் காட்டறியா! தூக்கமாவது லீக்கமாவது நான் டே டைம்லே தூங்கறதே இல்லே. கோர்ட், கச்சேரி, க்ளையண்ட்ஸ்ன்னு — அவாள்ளாம் தூங்க விடறதுமில்லே. ஏற்கனவே ராத்திரிலே தூக்கம் வரதில்லே.... இந்த அழகுலே மத்யானம் வேறே தூங்கினு... அவ்வளவுதான்.... ஆட்டம் க்ளோஸ்,''

''அப்படியா ஸார்.... ஓ.கே. நான் டூ தேர்ட்டிக்கே வரேன். என்ன பேப்பர்ஸ்லாம் கொண்டு வரணும் ஸார்?''

''ப்ரியா... நீ வந்து பார்வதி அம்மாவோட வில்லு. அது ஒங்கிட்ட ஸேஃபா இருக்கும்னு நெனைக்கிறேன்... மீதி பேப்பர் ஸெல்லாம் என்கிட்ட ஃபைல்ல இருக்கு.

பாரத நாட்டிலுள்ள கோயில் களிலே 'விஞர்ந்த கோவில்' (The Grandest Temple) என்று 'என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா' என்ற உலகப் பெருநூல் வர்ணிக்கும் கோவில் 'தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் கோவில்'.

- சுந்தர்



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான்®**
**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**




வளரும் குழந்தைகளுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள்—அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

''குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி''
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக :
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

அந்த அம்மா கொடுத்தா. செங்கல்பட்டு டிஸ்ட்ரிக்ட் கோர்ட்லே ஒ. பி. ஃபைல் பண்ண னும். அதுக்கு வில்லுதான் ரொம்ப முக்யம். நீ வந்து....ப்ரியா அந்த வில்லே எங்கிட்டே பத்ரமாச் சேர்த்துடு. மீதியை நான் பார்த் துக்கறேன்....''

பிற்பகல் வக்கிலைக் காணச் செல்ல சில மணி நேரம்தான் இருந்தது. ஒரு வழியாகச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு விட் டாள். இரவு சரியாகத் தூங்காததால் அவ ளால் சற்றுநேரம் தூங்காமல் இருக்க முடிய வில்லை. ஒரு மணி நேரம் தலையணையை அணைத்துக் கொண்டு நன்றாகத் தூங்கினாள். அவள் இதுவரை தலையணையை அணைத்துக் கொண்டு தூங்கியதே இல்லை. கிரிஷ்! அந்தக் குறுகிய காலத்தில் அவள் வாழ்க்கையை அவன் எப்படியெல்லாம் மாற்றிக் கொண் டிருக்கிறான்! புதிய வழக்கங்கள், புல்லரிக் கும் பழக்கங்கள்.... ஒரு ஆணுக்கு இவ் வளவு சக்தியா!

பார்வதியின் உயில். அதை அன்று கிரிஷின் சிவப்புப் பெட்டியில் வைத்திருந்தாள். கிரி ஷின் சிவப்புப் பெட்டி! இப்போது அது எங்கே இருக்கிறதோ! அவன் அறையில் தான் இருக்க வேண்டும். கிரிஷ் இல்லாத போது அதை எப்படி எடுப்பது? காலையி லேயே அதைப் பற்றிக் கிரிஷிடம் கேட்க வில்லையே. அனுமதி இல்லாமல் அவன் அறையில் எப்படி நுழைவது? நுழைந்தால் தான் என்ன? கிரிஷ் இன்னும் சில நாட்களில் சொந்தமாகப் போகிறவன்தானே. ஒரு வேளை அந்தப் பெட்டி பூட்டியிருந்தால் என்ன செய்வது?

அவசரம் அவசரமாகக் கிரிஷின் அறையில் நுழைந்தாள்.

அப்பா! அறையா இது? குப்பைத் தொட்டி போல் அல்லவா இருக்கிறது! ஆண்கள்! அவர்களுக்கு எதையுமே ஒழுங்காக வைத்துக் கொள்ளத் தெரியாதோ அல்லது முடி யாதோ. எங்கு பார்த்தாலும்... தரையில்... நாற்காலிகளில்... படுக்கையில்... காகி

---

இடம்: காசி விசுவநாதசுவாமி கோவில்
நேரம்: அந்தி மாலை

தங்கு தடையின்றி, தமிழில் உபந்நியாசம் நிகழ்த்தும் எட்டு வயதுச் சிறுமி ரஞ்சனி, ஐந்து வயதிலேயே ருக்மிணி கல்யாணம் கதா காலட்சேபம் செய்து அரங்கேறியவள்! கலைமாமணி சுப்பிரமணிய பாகவதரின் சிஷ்யை. கொங் கணிகவர் கோவில் பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறாள் ரஞ்சனி. தாயை இழந்த ரஞ்சனி யைத் தாத்தா திரு ரமணி வளர்த்துவருகிறார்.



தங்கள்.... துணி மணிகள்... சிகரெட் துண் டுகள்... எரிந்துபோன தீக்குச்சிகள்... கிரிஷ் புகை பிடிப்பவரா? வந்ததிலிருந்து ஒரு முறையாவது அவன் சிகரெட் பிடித்துப் பார்த்ததில்லையே.

வெகுநேரம் அவள் படுக்கையில் உட் கார்ந்தாள். தன் கண்களால் அறையை அளந்தாள். அந்தச் சிவப்புப் பெட்டி எங்கே? அறையெல்லாம் தேடினாள். கடைசியில் கட்டி லுக்கடியில் அது இருந்தது. பெட்டிக்குப் பக்கத்தில் இரண்டு காலிப் புட்டிகள். அதன் மேல் 'ரம்' என்று எழுதப்பட்டிருந்தது. கிரி ஷுக்குக் குடிப் பழக்கமும் உண்டோ? ராணுவத்தில் வேலை பார்ப்பவர்களுக்குக் குடிப்பழக்கம் இருக்கும் என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறாள். பார்வதியும் அதைப் பற்றிப் பேசியிருக்கிறாள். ராணுவத்தில் குடிப்பது ஒரு கெட்ட பழக்கமாக யாரும் கருத மாட்டார்களாம். குடிப்பது நாக ரீகத்தின் சின்னமாம்.

சிவப்புப் பெட்டி பூட்டாமலேயே இருந் தது. இந்த ஆண்களே இப்படித்தான்! மெதுவாகப் பெட்டியைத் திறந்தாள். சே! விலையுயர்ந்த பெட்டியா இது? குப்பைத் தொட்டி! அன்று அவள் பார்வதியின் உயி லைப் பக்கவாட்டில் உள்ள ஒரு பையில் வைத்திருந்தாள். அவளுக்கு அது நன்றாகவே நினைவில் இருந்தது. இப்போது அந்தப் பையில் உயிலைக் காணோம்!

எங்கே அந்த உயில்? அன்று தான் வைத் திருந்த இடத்தில் இல்லையே! பெட்டியைக் கையில் எடுத்து அதை அப்படியே கவிழ்த் தாள். உள்ளே இருந்த எல்லாப் பொருள் களும் தடதடவென்று தரையில் விழுந்தன. அப்போது அவள் கண்ணில்பட்டது ஒன்று...

அது ஒரு புகைப்படம்!

அவசரம் அவசரமாக அதைக் கையில் எடுத்தாள். அந்தப்படத்திலிருந்தது ஒரு பெண் —பார்வதி! அவள் அணிந்திருந்த புடவை யைப் ப்ரியாவால் அடையாளம் தெரிந்து கொள்ள முடிந்தது. அது சில மாதங்களுக்கு முன்புதான் வாங்கப்பட்ட புடவை. அப்படி யென்றால் தன் கையில் இருக்கும் பார்வதி யின் புகைப்படம் சிலநாட்களுக்கு முன்புதான் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். பார்வதியின் புகைப்படம் கிரிஷின் சிவப்புப் பெட்டிக்குள் எப்படி வந்தது? பார்வதியே கிரிஷிடம் கொடுத்தாளா? அப்படி யென்றால் எப் போது? எதற்காக?

ஆழ்ந்த யோசனையில் மூழ்கிக் கொண்டே புகைப்படத்தைத் திருப்பிப் பார்த்தாள். அவள் கண்கள் அகல விரிந்தன. அவள் கைகள் நடுங்க ஆரம்பித்தன. மீண்டும் முறைத்துப் பார்த்தாள். அவள் கண்களைக் கூர்மை யான ஈட்டிகளைப் போல் தாக்க முன் வந்தன படத்தின் பின்புறத்தில் லேசாகப் பென் சிலினால் எழுதப்பட்டிருந்த மூன்று ஆங்கில வார்த்தைகள். இஸ் ஷீ மம்மி! இதுதான் அம்மா!.... இப்படி பார்வதியை யார், யாரி டம் காட்டுகிறார்கள்? எதற்காக? கிரிஷின் படுக்கை அறை வேகமாகச் சுழல ஆரம் பித்தது. ப்ரியா கட்டிலைப் பிடித்துக் கொண்டு அப்படியே திகைத்து நின்றாள்.

(தொடரும்)

# லக்மே அறிமுகப்படைப்பு: பரதநாட்டின் முதன்முதல்: புரதச்சத்துக் கண்டிஷனர் அடங்கிய ஷாம்பூ.




அழகுத் தூய்மையளிக்கும், உமது கூந்தலின் குறைதிருத்தும், பளபள புதுவளக் கட்டமைப் பண்படுத்தும்.

ப்யூட்டி & எக்
60 மிலி & 120 மிலி

# Lakmé

மயிரிழைகளைத் தூக்கித் துவண்டு போக வைக்கும் சாதா ஷாம்பூக்கள் இனி எதற்கு ? உமது கூந்தலைப் பண்படுத்த இதோ விஞ்ஞான முறைப்படி வளமூட்டிய லக்மே விசேஷ ஷாம்பூ.





வாடி நொடித்த மயிரிழைக்கு உயிரூட்டும் புரதச் சத்து, லக்மே ஷாம்பூவிலுள்ள கண்டிஷனர். இது மயிரிழைகளின் குறை திருத்துகிறது.

**சரிவிகிதப் பொருத்த முடைய அதன் உள்ள மைப்பு கேச நலம்**



**ஓங்கவைத்திடும் :**

ஷாம்பூவின் காரப்பங்கும் அமிலப் பங்கும் சரிக்குச்சரி பொருந்தியிருப்பது (pH சரிவிகிதநிலை) ஒரு சிறப்பாகும்.



**இயல்பான சரிவிகித குணநிறைவு பெற்ற ஷாம்பூ:**

சாதா ஷாம்பூக்கள் பெரும்பாலும் காரகுணம் மிகுந்தவை. ஆதலால் மயிரிழை பிளந்து வாடிவிடும். மாறாக அதிக காரம், அதிக அமிலம் இல்லாத நல்லுசித நிலையில் உள்ளது லக்மே ஷாம்பூ. எனவே கூந்தலுக்கு அதிக வனிமை. நெகிழ்வுத்தன்மை...சிக்கல் விழாக சீர்மை. நீடித்த நறுமணம். இனியும் உமக்கேன் சிகைக் சேதம்" உபயோகிப்பீர் வேண்டிதவறாமல் லக்மே ஷாம்பூ.

daCunha/L-Sham./127/T.



''என்னப்பா, மாடு வத்தல் தொத்தலா இருக்கே?''
''நீங்க கொடுக்கிற காசுக்கு பெரிய கோவில் நந்தியையா வண்டியிலே பூட்ட முடியும்?''



''இந்தப் பெரிய கோவில் கோபுர நிழல் கீழே விழுறதில்லையாமே?''
''அவ்வளவு உயரத்திலிருந்து விழ, பயமா இருக்காதா?''

# தஞ்சாவூர் சிரிப்பு!





''சாப்பிட்டு விட்டுத் தாம்பூலம் போடாம இருக்க முடியாதா?''
''நீங்க ஒண்ணு! இந்தத் தஞ்சாவூர்க் காரங்களுக்குத் தாம்பூலமே தான் சாப்பாடு!''

''என்னய்யா நீ 'தேர்ட் கிளாஸ்' டிக்கட் வாங்கறதுக்கே இழுபறி! இன்னிக்கு ஃபர்ஸ்ட் கிளாஸ் எப்படி?''
''வீணை கொண்டு போறேனே! சங்கீதத்துக்கும் சங்கீதத்தோட சேர்ந்தவனுக்கும் மதிப்பு!''






''உங்கிட்ட பொய்க்கால் குதி
கத்துக்க வந்திருக்கார், 'இ
குதிரை ஓட்டற அமெரிக்க






''இந்தத் தஞ்சாவூர் மாப்பிள்ளை என்னை உருட்டுப் பொம்மையாப் போட்டு உருட்டுறாரே!''


க அது.... 'மிந்த்ரியார்ப்னு' விக்
''
பருப்புங்க!''


''சரஸ்வதி மகாலாம்! திவுளிக்குத்தான் ஜவுளி வாங்கியாச்சே வாணி மகால்ல! மறு படி சரஸ்வதி மகால் எதுக்கு?... நடையைக் கட்டு புள்ளே!''
சரஸ்வதி மஹால்
நூல் நிலையம்


ான்ஸ்
ரேஸ்
ி!''


''வீணை குடம் ரொம்பப் பெரிசு!''
''இருக்கட்டுங்க... உங் களுக்குப் பாந்தமா இருக்கும்!''


''என்ன மாலை வேணும்?... தெட்டி. மாலை, நெல்லு மாலை, ஜவ்வாது மாலை, சந் தன மாலை....''.
''குடமிளகாய் மாலை வேணுங்க!''


(சிலை கடத்தல் ஆசாமியிடம்)
''உனக்கு நல்ல சான்ஸ்! இந்தப் பெரிய கோவில் நந்தியைக் கடத் திக் கொண்டு போகணும்.... அமெரிக்காவுக்கு!''

# இரவு ஒருமணி- மீனம்பாக்கம்

— வஸந்த் —

இண்டிவனத்துக்கும்சென்னைக்குமிடையே இரவு பதினொரு மணிக்குத் திருவள்ளுவர் விரைவுப் பேருந்தில் இந்தக்கதை ஆரம்பமாகிறது!

ஒரு பிரச்னையோடு!

பிரச்னை, என் பக்கத்தில் பரிதாபமாகத் தவிக்கும் இந்த அமெரிக்கத் தம்பதிகளிடம் பிறக்கிறது!

சுற்றுலா செய்து, தமிழ்நாடு டூரிஸத்துக்குப் பெரிதும் உதவிய பிறகு, 624, மாடிசன் அவின்யூ, நியூயார்க், பின் 10032 என்ற தங்கள் முகவரிக்குத் திரும்ப இவர்கள் ஆசைப்பட, அதில் நமது 'இந்தியன் பங்சுவாலிடி' மண்ணைப் போட்டுவிட்டது!

அதுதான் பிரச்னை!

நள்ளிரவு ஒரு மணிக்கு மீனம்பாக்கத்து 'கண்ட்ரோல் டவருக்கு' 'டாடா' காட்டிப் பறக்கப்போகும் காரவல் விமானத்தில் இவர்கள் இருந்தாக வேண்டும்!

பம்பாய் செல்ல!

அங்கிருந்து ஒரு மணி நேர இடைவெளியில் நியூயார்க் புறப்பாடு!

பஸ்ஸுக்கு வெளியே, பவுர்ணமி நிலவில் 'பிளாஸ்டு' நோய் பிடித்த நெற்கதிர்களைப் பரிதாபத்தோடுபார்த்து,'தையோடிமடான்' உபயோகிக்கச் சிபாரிசு செய்ய நினைக்கையில் அமெரிக்காவின் பெண்பால் என்னைத் தொட்-ஷாக்-டது!

''நேரமாகிவிட்டபடியால் பஸ்ஸை 'ஏர் போர்ட்' வாசலிலேயே நிறுத்தச் சொல்ல முடியுமா?''

அமெரிக்காவின் பெண்பால் ஆங்கிலம், ஜலதரங்கம் மாதிரி இருந்தது.

அருகிலிருக்கும் என் மனைவி தூங்கும் தைரியத்தில் அமெரிக்காவை சிநேகிதமாகப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, ''எஸ்'' என்றேன்.

கண்டக்டருக்கு, ஜலதரங்கத்தைத்தமிழில் மொழிமாற்றிச் சிரத்தையோடு வாசித்தேன்.

சுற்றுலா வருபவர்களுக்கு உதவ வேண்டுமென்று கண்டக்டருக்குத் தெரியும் என்றேன்.

கண்டக்டர் முறைத்தார். ''தாம்பரம் வுட்டா சைதாப்பேட்டைதான் சார் ஸ்டாப்பிங்! வோணும்னா சைதாப்பேட்டையில் இறங்கி வரச் சொல்லு சார்! ரூல்ஸுன்னா ரூல்ஸ்தான் சார், மீற முடியுமா? நாளைக்கு எவனாவது கம்ப்ளெயிண்ட் எழுதி வேலை போனா நீயா சார் என் பெண்டாட்டி புள்ளையைக் காப்பாத்துவே.''

அவன் பெண்டாட்டி பிள்ளையைக் காப்பாற்றும் தைரியம் எனக்கு இல்லாததால் நான் மெதுவாய் வாபஸ் வாங்கியபடி அமெரிக்கரைத் தோல்விப் பார்வை பார்த்தேன்.

என்னுடைய காஸியோ கடிகாரம் 11.15 காட்டியது. எழுப்பினால் எழுந்திருக்காத என் மனைவி சாமியாடி, மோதிக்கொண்டு விழித்தவள் 'தேவி' வாங்க வேண்டுமென்றாள்.

ஞாபகம் வந்தவளாக...!

பாவம்! அமெரிக்கருக்கு எப்படியும் உதவ வேண்டும்.

எப்படி?

மதுராந்தகத்தில் பஸ் பால் குடிக்க ஒரு மிடில் கிளாஸ் ஓட்டலில் ஒதுங்கியது!

நாய்க்குட்டியோடு சங்கீதாசிரிக்கும்'தேவி' வாங்க என் மனைவி மீண்டும் நினைவூட்டினாள்!

'பெரிய ரோதனைடாப்பா!'

எல்லோரும் கீழே இறங்கினார்கள்!

சிகரெட் புகைத்தார்கள்.

ஓரமாய் ஒதுங்கி, கருவேல முட்செடிகளுக்கு அமோனியா உரமிட்டார்கள்!

சைனா டீயும் இந்தியன் பன்னும் விழுங்கினார்கள்!

பஸ் மெட்ராஸ் போவதையே மறந்துவிட்ட மாதிரி நின்றது.

எதிரே, புதிதாய் பெயின்ட் அடித்த சுவரில் 'எங்க பாட்டன் சொத்தை' இரண்டு பேர் சுவாரஸ்யமாய்ச் சுரண்டியபடி பேசிக்கொண்டிருந்தார்கள்!

சங்கீதாவை'நாயோடு','தேவி'யில் தேடிப் பிடித்தேன்!

அமெரிக்கர் நான் கொடுத்த கசந்த 'திரிவேணி'யை ஆவலோடு புரட்டிப் புரட்டிப் பார்த்தார்!

நான் ஆசையோடு,அமெரிக்காவின் பெண்பாலுக்கும் இன்னொரு திரிவேணி பாக்கு கொடுக்க, என் மனைவி பத்துவிரலைக் காட்டிப் பைசா வாங்குங்கள் என்றாள்.

ஓ!

இலவச டிபனின் திமிர் நிறைவுடன் டிரைவர் பஸ்ஸைக் கிளப்ப, ஸ்பீடா மீட்டரின் முள் நிரந்தரமாய் '90'ஐக் கட்டிக் கொண்டது!

காஸியோ வாட்ச் இப்போது 12 மணியாகித் தேதி மாறியது.

பஸ்ஸை ஏர்போர்ட் வாசலில் நிறுத்த என்ன வழி?

யோசனையைப் பிரசவிக்கும் மூளை மடிப்புகளின் சுருக்கங்களை அதிகமாக்கினேன்!

'அபார்ஷன்தான் ஆகிறது!'

அமெரிக்கர் என்னிடம், ''தாம்பரத்திலேயே இறங்கிவிடவா? வேறு வழியே இல்லையா? டாக்ஸி கிடைக்குமா?'' என்றார் 'நீங்களும் உங்கள் தேசமும் இவ்வளவுதானா?' என்று குத்துகிற மாதிரி பார்த்துக் கொண்டு. தாம்பரத்தில் இறங்கினால் நிச்சயம் அவர்களால் விமானத்தைப் பிடிக்க முடியாது!

'எப்படியாவது நிறுத்திவிடலாம்!'

டிரைவரிடம் கேட்டால்?....

பஸ்ஸின் குலுக்கலில் ஆடிக்கொண்டே டிரைவரிடம் போய் நிலைமையைச் சொன்னேன்.

''எனுக்கென்ன சார்? ஸிங்கின் விசில் வந்தா நிறுத்துவேன்,டபிள் விசில்னா போய்க்

கிளே இருப்பேன். எல்லாம் கண்டக்டரான்டே கண்டுக்கோ சார்'' என்று கையை விரித்த டிரைவர் அவசரமாய் ஸ்டியரிங்கைப் பிடித்துச் சமாளித்தார்!

எப்படி?- எப்படி?

எப்படி?

ஏர்போர்ட் வாசலில் நிறுத்துவது எப்படி?

மெட்ராஸ் கேட், தாம்பரத்தைத் தாண்டினோம்.

குரோம்பேட்டை வெற்றி வெறிச்சிட, தெருவோரத் தியேட்டர் வறுமையின் நிறம் சிவப்பென்றது!

ப்ளேன் போக அரை மணி இருப்பதாக காளியோ சொல்லிற்று.

பல்லாவரம் லட்சுமி, ஜனதா எல்லாம் தாண்டி மீனம்பாக்கத்தைச் சமீபித்தோம்!

இருட்டைக் கொன்று ஏர்போர்ட்டின் திடீர் நியான் வெளிச்சம்!

அமெரிக்கர் ஹோல்டாலைத் தோளிலே சுமந்தபடி எழுந்துகொள்ள, கண்டக்டர் டபிள் விசில் கொடுக்க, நான் என்ன செய்வதென்றுதீர்மானிப்பதற்குள்,டிரைவர் காலுக்குக் கீழே. இடைவெளியில் டயருக்குப் பக்கத்தில் சிவப்பு ஜ்வாலை சீறியது!

நெருப்பு....! பஸ் நிற்க-

எல்லோரும் பதறியபடி வெளியே குதித்தார்கள்!

திருவள்ளுவர் மட்டும் அரிச்சுவடியோடு அப்படியே உட்கார்ந்திருந்தார்!

பெட்ரோல் டாங்க் பற்றிக்கொண்டால்?

கண்டக்டரும் டிரைவரும் பிசிநேரி ஆடு மாதிரி முழிக்க... பலர் தண்ணீரை வாட்டர் பாக்கில் தேட....

அமெரிக்கர் அவசரமாய் மண்ணை வாரி அடித்தார்!

மற்றவர்களும் பதற்றத்துடன், அவருடன் சேர்ந்து கொண்டார்கள்!

ரன்வேயில் 'காரவல்' முதுகு தெரிந்தது!

விமானம் பறப்படப்போகிறதென்று நான் எல்லா கத்தியும் அமெரிக்கர் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை!

காரவல் ரன்வேயில் வழுக்கி ஓட ஆரம்பித்தது!

பஸ்ஸில் ஒரு வழியாய் நெருப்பு அணைந்ததும், எல்லோருக்கும் உயிர் வந்தது.

அமெரிக்கர் அவசரமாய் ஓட நினைக்கையில் ரன்வேயில் தன் கடைசி 'உந்தலை' முடித்துக் கொண்ட காரவல், ஆகாயத்தில் புறந்தது!

பஸ்ஸில் இப்போது முழுவதுமாய் நெருப்பு அணைந்து விட்டது.

திருவள்ளுவர் மேல் மட்டும் சற்றுக் கரி படிந்திருந்தது!

## போட்டிக் கதை 10



விஜயநகரப் படைகள் வெட்ட வெளிகளில் தங்குவார்கள். கூரைகளை வேய்ந்து வரிசையாகத் தெருக்களை ஏற்படுத்தி ஒரு தாற்காலிக நகரம் செய்து கொள்வார்கள்.

-பர்போஸா

## 32

அன்றைய இரவு எல்லோருக்கும் முக்கியமானதாக மாறியிருந்தது.

அரண்மனைக்குள் பெரிய ராஜதந்திர நாடகம் நடந்து கொண்டிருக்கும்போது

வெளியே ஜனங்களிடையே குட்டி நாடகங்கள் நடந்து கொண்டிருந்தன.

இரவு முழுவதும் ஜனங்கள் உறங்கவில்லை. அவரவர் வீட்டில் ஒரு ரகசியமான பரபரப்பும், ஆயத்தங்களும் நடந்துகொண்டிருந்தன.

தங்கள் பாத்திர வகையறுக்களைக் கிணறுகளிலோ குழிகளிலோ போட்டு மறைத்துக் கொண்டிருந்தார்கள்.

தங்கள் தங்கம், வைரம் இத்யாதிகளைத் தங்கள் மூட்டைக்குள் ரகசிய இடுக்குகளில் வைத்துத் தைத்துக் கொண்டிருந்தார்கள்.

எல்லோரும் கோட்டையை விட்டு வெளியேறி, ஒரு நீண்ட கால வெளியூர் வாழ்க்கைக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள்.

சிலர் நிரந்தரமாகத் தெற்கே உள்ள ஊர்களில் குடியேற விரும்பினார்கள்.

நொடி நேரத்தில் எல்லாவற்றையும் சுருட்டி எடுத்து வெவ்வேறு இடங்களுக்கு ஓடிவிடும் ஒருவித க்ஷண வாழ்க்கையாகத்தான் அந்தக் குறிப்பிட்ட கால மக்களின் வாழ்க்கை இருந்தது.

ஏற்கனவே பல வீடுகள் பூட்டப்பட்டு விட்டன. குடும்பங்கள் நிழலோடு நிழலாக மேற்குக்கோட்டை வாசலை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன..

துளி சத்தம் எழ வேண்டுமே, கிடையாது.

எல்லோரும் கோட்டை நாயகத்திடம் ஏதாவது நகையோ, தங்கமோ, வைரமோ கொடுத்துத் தங்கள் தங்கள் குடும்ப விடுதலையை யாசிக்க நினைத்திருந்தார்கள்.

ஊர் முழுதும் இதே நினைவை ஏகோபித்து நினைத்து எல்லோருமே மௌன உருவங்களாக நிழலின் ஒதுக்கத்தில் மறைந்து ஒரே நோக்கத்தோடு நடந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களது ஒரே எதிரி இப்போது லிங்கம நாயக்கரும், அவரது பரிவாரங்களும்தான்!

பசி என்னும் அசுர அக்கினி அவர்களது குடல்களை எரித்துக் கொண்டிருக்கும்போது,

நாடு, ராஜ்யம், ராஜா முதலியனவெல்லாம் வெறும் அர்த்தமற்ற வார்த்தைகளாக அவர்களுக்குத் தென்பட்டன.

தங்கள் தீர்மானத்துக்கு எதிரே யார் வந்தாலும் அதை எதிர்க்க அவர்கள் சித்தமாக இருந்தார்கள்.

# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்



இந்த ஜனங்களின் கூட்டம் மேற்குக் கோட்டை வாயிலில் குபுகுபுவென்று சத்தமில்லாமல் கூடியது.

கூடியிருந்த பெரும்பாலான குடும்பங்கள் பட்டினியிலும் முழுப் பட்டினியிலும் இருந்தபடியால் பாதி ஜனங்களும் நடைப் பிணங்களாகத் தென்பட்டார்கள்.

அந்த நள்ளிரவில் வாய் திறவா நிசப்தமுடன் அந்த உடல் சுருங்கிய மனிதர்கள் அங்கே கூடிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் அது ஒரு வேதாள உலகம் போல் தென்பட்டது.

அரண்மனையும் அப்போது சும்மா இருக்கவில்லை.

ஸ்ரீரங்கனைப் பாதுகாப்பில் வைத்த கையோடு லிங்கம நாயக்கர் வேங்கட ராஜாவிடம் வந்தார்.

இலேசாக அயர்ந்திருந்த அவரை எழுப்பி, ''மகாராஜா! ஒரு சங்கடமான சூழ்நிலையில் சிக்கியிருக்கிறோம். எனக்கு ஒரு விஷயம் தெரிய வேண்டும். இந்தப் பெண், அவள் பெயரென்ன, சுவர்ணமுகியா, அவள் உண்மையில் நமது பழைய மகாராஜா இம்மாடி ஸ்ரீரங்க ராஜாவின் மகள்தானா?'' என்று கேட்டார்.

''எனக்குத் தெரியவில்லை. ஆனால் ரங்கப்ப தளவாயிடம் வளர்ந்தாள் என்று நினைக்கும்போது அது உண்மையாக இருக்கலாம்!'' என்றார் வேங்கட ராஜா!

''அவர்தான் இறந்து விட்டாரே! இது பற்றி ஏதாவது பட்டயம் எழுதி வைத்திருப்பாரா?''

''இருக்கலாம். அதையெல்லாம் அர்ச்சுனனைக் கேட்டால் தெரியும்!''

''அவன்தான் மதுரை போனவன் வரவில்லையே! இந்தக் கூற்று உண்மையோ, பொய்யோ எனக்கு உடனே ஒரு காரியம் செய்யத் தோன்றுகிறது!''

''என்ன காரியம்?''

''பொழுது விடிந்தால் கோட்டை வாயிலில் என்ன நடக்கும் என்று தெரியவில்லை. இந்த நிலையில் பட்டத்துக்கு உரிமையுள்ள ஒரு பெண்ணை இங்கேவிட்டு வைத்திருந்தால் எவ்வளவோ ஆபத்து ஆயிற்றே!''

''அதற்காக என்ன செய்ய வேண்டும்?''

''ஒன்று அந்தப்பெண்ணைக் கொல்ல வேண்டும். அல்லது....''

வேங்கடராஜா திடுக்கிட்டு லிங்கமரைப் பார்த்தார். ''அல்லது?....''

''அவளைத் தாங்களே மணம் செய்து



கொள்ள வேண்டும்'' என்றார் லிங்கமர்.

''நானா?'' என்று நாத்தடுமாறிக் கூறினார் வேங்கடராஜா.

''ஆமாம்; தாங்கள்தான்! அதுவும் இன்று இரவே செய்ய வேண்டும். பட்டத்துக்குரிய பெண்ணைத்தனியாகவைத்திருந்தால்ஆபத்து. அவள் கையைப் பிடிக்கும் யாரும் நாளை சிங்காதனம் ஏற ஆசைப்படுவார்கள்.''

''லிங்கமா! இந்த விஷயத்தைப் பற்றி இப்போது ஏன் அவசரம்? மெதுவாகக் கவனித்துக் கொள்ளலாம்.''

''இல்லை மகாராஜா! இப்போது நாம் ரொம்ப நெருக்கடியில் இருக்கிறோம். நாளைக் காலை நடக்கப்போவது நமது சாம்ராஜ்யத்துக்கே மிக முக்கியமானதாக இருக்கும்! சொல்லுங்கள்! அவளைக் கொன்றுவிடவா, அல்லது அவளை நீங்கள் ஒப்புக்குக் கல்யாணம் பண்ணி அந்தப்புரத்தில் தள்ளுகிறீர்களா?''

''நீசொல்வது கொடூரமாக இருக்கிறதே!''

''உண்மைதான். எனினும் இதில் தீர்மானித்துத்தான் ஆக வேண்டும்.''

வேங்கடராஜா லிங்கமர் சொல்லும் விஷயங்களை ஏற்கனவே அறிந்தவர். அந்த நாளைய ராஜதந்திரம் அதுவாகத்தான் இருந்தது.

இருவரும் சிறிது வாக்கு வாதம் நடத்திக் கொண்டிருக்கும்போது.

அரண்மனை வாயிலில் ஏதோ அரவங்களைக் கேட்டு அங்கே நோக்கி ஓடினார் லிங்கமர்.

நள்ளிரவுக்கு மேல் கவர்ணமுகி உறங்குவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தாள்.

தலைகாணியில் சாய்ந்து கண்களை மூடியும் உறக்கம் வரவில்லை. நல்ல உறக்கம் அவளை விட்டுப் போய்ப் பல மாதங்கள் ஆகிவிட்டன!

வளர்ப்புத் தந்தை ரங்கப்ப தளவாய் அவளிடம் கூறியிருக்கிறார்: ''அரச குடும்பத்தில் பிறப்பது வெறும் சுகம் என்று நினையாதே! நரகத்துக்கு ஈடான துக்கம் அதில் உண்டு!'' என்று.

பிறந்ததே துக்கம்! வளர்ந்ததும் துக்கம்!

ரங்கப்பாவிடம் வந்த பிறகுதான் ஓரளவாவது சுகம் கிடைத்தது. இப்போது எதிர்காலத்தை நினைத்தால்... என்ன பயமாக இருக்கிறது!

என்ன ஏமாற்றம்? வேங்கடராஜாவிடம் அறிமுகம் கிடைத்தால் உடனே அவர் நம்மைக் கௌரவித்துப் பிரமாதமாக உபசரிப்பார் என்று நினைத்தோமே! எல்லாம் பொய்யாகி விட்டதே!

இப்போது இங்கே இந்த அறையில் வைத்திருப்பது கூட காராக்கிருகத்தில் இருப்பது போல இருக்கிறதே!

அர்ச்சுனனுக்கு இது தெரியுமா? அவர் ஏன் இன்னும் வரவில்லை? எங்கே இருக்கிறார்?

ஒருவேளை அவருக்கு என்மீது கோபம் இருக்குமோ? அன்று கோட்டை அகழிப் புறத்தில் என்னைப் பார்த்தும் பேசாமல் இருந்தாரே? இன்னொருத்தர் கூட நின்றதால் அவருக்குப் பேச இஷ்டமில்லையோ?

இருக்காது! அந்தச் சம்பவத்துக்குப் பிறகுதான் ஓலை ஒன்று அனுப்பித்தாரே! அது அவர் மனம் சரியாக இருக்கிறது என்பதற்கு அடையாளம்தானே?

இருந்தாலும், ஸ்ரீரங்கனுடன் இருந்தது ஒரு சிறிய அளவாவது அவருக்குத் துன்பத்தைக் கொடுத்திருக்கலாம். அதற்கு நான் என்ன செய்ய முடியும்?

சந்தர்ப்பங்கள் அப்படிநேர்ந்துவிட்டனவே!

திருப்பதிக்குப் போனதிலிருந்து வரிசையாக அவளுக்கு நேர்ந்தவைகளை நினைத்துப் பார்த்தாள். கண்கள் புலபுலவெனக் கொட்டின. ரங்கப்பாவை மானசீகமாக நினைத்து, ''இதைவிடவா நரகம் வேண்டும், சொல்லுங்கள்!'' என்றாள்.

கதவை யாரோ திறந்தார்கள்.

இந்த ராத்திரியில் யார் திறக்கிறார்கள்?

உள்ளே அவசரமாக இரண்டு தாதிகள் வந்தார்கள். ஒரு தட்டில் பூ, சந்தனம், புடவை இவைகளுடன் வந்தார்கள்.

''நல்ல வேளை! விழிச்சுக்கிட்டு இருக்கீங்களே. எழுந்திருங்க!'' என்றார்கள் தாதிகள்.

''என்ன விஷயம்?'' என்று திகைப்புடன் கேட்டாள் கவர்ணமுகி.

''கல்யாணம் நடக்கப் போகுது வாங்க!'' என்றாள் ஒருத்தி.

''எனக்கா?''

''ஆமாம்!''

''சீ,போங்க வெளியே,போங்க வெளியே!'' என்று தூக்கி எறிந்தாள் அவள்.

அதே நேரத்தில் பெண் காவலாளிகள் உள்ளே நுழைந்தார்கள்.

அதே இரவில் கோட்டைக்கு வெளியே சற்றுத் தூரத்தில் இருந்த அந்தக் காட்டு வெளிக்குள் அர்ச்சுனனும் கிருஷ்ண சந்திரனும் விழித்து இருந்தார்கள்.

அவர்களது இரண்டாயிரப் படை மர வெளிகளில் அயர்ந்து படுத்திருக்க,

---

**தஞ்சையிலுள்ள சரபோஜி மன்னரின் உருவச் சிலை பளிங்கால் ஆனது. மூன்று லட்ச ரூபாய் செலவில் 1807-இல் இத்தாலியில் செய்யப்பட்டது இச்சிலை.**

**-வசந்தா கோவிந்தன்**

---



இருவரும், ஒரு உச்சி மேட்டிலிருந்த பாறையில் ஏறி அமர்ந்து கொண்டு அந்த நள்ளிரவில் தூரத்தில் தெரிந்த கோட்டையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கோட்டைப் பக்கத்தில் திடீரென்று எழுந்த சில தீவர்த்தி இயக்கங்கள் இரு இளைஞர்களையும் உசுப்பியிருந்தன.

''என்ன நடக்கிறது?'' என்றான் அர்ச்சுனன்.

''கோட்டைக்குள் போய்விடுவார்களோ?'' என்றான் கிருஷ்ண சந்திரன்.

''இந்தத்திம்ம ராஜாவுக்கு வந்த பவிஷைப் பார்த்தாயா? யாரோ இவ்வளவு படையைக் கொடுத்திருக்காங்களே!''

''நம்ப பக்கத்து ராஜாக்களே இருக்கும்!''

''சுல்தான் (பீஜப்பூர்) கொடுத்திருப்பாரோ?''

''அப்படிக் கொடுத்தாலும் ஆச்சரியப்படறதுக்கில்லை.''

''இப்போ இருக்கிற குழப்பத்திலே யார் என்ன வேணும்னாலும் செய்வாங்க!''

''அடேடே! இங்கே பாரு!''

கிருஷ்ணச் சந்திரன் சுட்டிக் காட்ட, அர்ச்சுனன் திரும்பினான்.

கீழே கணவாய் போன்ற பள்ளத்தாக்கில் நிழல் கூட்டம் ஒன்று நடந்து சென்றது.

கணவாய் வெறுமையாய், வெண்மைக் கற்கள் நிறைந்து காணப்பட்டதால் ஒருவித மினுமினுப்போடு தெரிந்தது. அதன் பின்னணியில் அந்த நிழல் கூட்டம் ஊர்ந்து சென்றபோது அவர்களுக்குப் பளிச்சென்று தெரிந்து விட்டது

''ஆட்கள்!'' என்றான் கிருஷ்ண சந்திரன்.

''படை!'' என்றான் அர்ச்சுனன்.

''இவ்வளவு சின்னப் படையா?''

''ஆமாம்! இது விநியோகப் படையாக இருக்கும். பொதிகள் போகுது—பார்!''

''யார்விநியோகம் நடத்தறாங்க?யாருக்கு''

''திம்ம ராஜாவுக்கு யாரோ உதவி பண்றாங்க!''.

கீழே நிழல் கூட்டம் அவர்களுக்கு நேராக வந்தது.

கூட்டத்தின் பின்னால் அந்தக் குதிரைகள் தெரிந்தன. ஒரு பல்லக்குந் தெரிந்தது.

''கொஞ்சம் இரு!'' என்று அர்ச்சுனன் எழுந்தான். கீழே கிடந்த வில்லை எடுத்தான். விண் விண் என்று இரண்டு அம்புகளைப் பறக்க விட்டான்.

படையின் பின் பகுதியில் ஒரு சலசலப்பு.

குதிரைகள் கனைத்துத் துள்ள, பல குரல்கள் எழும்பி நிழற் கூட்டம் உடனே நின்றது.

பல்லக்கிலிருந்து ஒரு ஆஜானுபாகு கீழே குதித்தான்.

மேட்டின் உச்சியை நோக்கி, ''ஹூ இஸ் தேட்? ஃப்ரண்ட் ஆர் ஃபோ? திஸ் இஸ் இங்கிலீஷ் கன்வாய்!'' என்று கத்தினான்.

அர்ச்சுனன் ஒரு கணம் திகைத்தான். அந்தக் குரல் அவனுக்குப் பழகியது போல் இருந்தது.

கீழே கூர்ந்து பார்த்தான்.

பிறகு வாயில் இரு கைகளைக் குவித்து, ''ட்ரேக் ராஜர்'' என்று கத்தினான்.

குரல் பாறை முகடுகளில் மோதி எதிரொலித்தது. ''ட்ரேக் ராஜர்.''





''யார் நீ?'' ராஜர் தனது பல் படாத தமிழில் கத்தினான்.

''அர்ச்சுனன்'' என்று கத்தினான் அர்ச்சுனன்.

ஒரு கணம் கீழே திகைப்பு.

பிறகு, ''அர்ச்சுனா, கம் ஆன் மை ஃப்ரண்ட்'' என்று கத்தினான் ராஜர்.

அர்ச்சுனனும் கிருஷ்ண சந்திரனும் புறப்பட்டார்கள். உச்சியிலிருந்து கணவாய்ப் பக்கம் இறங்க வசதியான பாதை இல்லை. இருவரும் தட்டுத் தடவி, பாறைகளில் பிடித்து, கைகளிலும், உடம்பிலும் சிராய்த்துக்கொண்டு கடைசியில் கீழே வந்து நின்றார்கள்.

ராஜர் ஓடி வந்தான்.

''அர்ச்சுன்! அர்ச்சுன்!'' என்று சொல்ல இருவர் கைகளும் ஒன்று சேர்ந்தன.

''ராஜர்! இது என்ன ராத்திரிப்பயணம்?''

''ரகசியப் பயணம்!''

''உன்னிடம் என்ன இருக்கிறது?''

''உணவு, யுத்த தளவாடம்!''

''எங்கே போகிறது?''

''வேலூர்க் கோட்டைக்கு.''

''யார் கட்சிக்குப் போகிறது?''

சிரித்தான் ராஜர். ''அர்ச்சுனா! நீ சொல்லு யார் கட்சிக்குப் போகணும் என்று!'' என்றான்.

''நீ முதலில் சொல்லு. யாருக்காக இதைக் கொண்டு போகிறாய்?''

ராஜர் உடனே மறுமொழி கூறவில்லை. அதற்குள் குதிரையிலிருந்து இறங்கி வரும் ஓர் உருவத்தின் மீது அர்ச்சுனனின் கண் விழுந்தது.

எச்சரிக்கையுடன் திரும்பியது.

(தொடரும்)

# கலைகளின் காப்பகம்

## கரகம்

தஞ்சை ஜில்லாவில் வளராத கலைகளா? தஞ்சை நகரில் கொந்தளக்காரர் தெருவில் சுமார் ஐம்பது குடும்பங்கள் கரக ஆட்டத்தில் ஈடுபட்டிருக்கின்றன.

கரகம் மட்டுமல்லாமல், நையாண்டி மேளம், குறவன்-குறத்தி நடனம், மயில் டான்ஸ் எல்லாம் ஆடுவார்கள். ஓர் ஆட்டத்துக்குப் போக்குவரத்துச் செலவு உட்பட ரூ. 500லிருந்து 1500 வரை கிடைக்கும். சம்பத்தில் ஊட்டியில் ஓர் எஸ்டேட் முதலாளி நல்ல வரவேற்பளித்து, தக்க சன்மானமும் தந்ததை நன்றியுடன் நினைவுகூருகிறார் செல்வராஜ்.

இன்ன விழாவென்றில்லாது, கோயில் ஊர்வலம், முஸ்லிம் திருமணம், கட்சி ஊர்வலம்—எல்லாவற்றிலும் கரக ஆட்டக்காரர்கள் பங்கேற்பார்கள். ஆனால் வருடம் முழுக்க இவர்களுக்குத் தொழில் இராது. மற்றக் காலங்களில் தையல் கலை, அல்லது பெட்டிக் கடை வைத்துப் பிழைப்பு நடத்துவார்கள்.

இவர்கள் ஆட்டத்திலிருந்து மாதிரிக்கு ஒரு பாட்டு:

"சாலே நல்லா கடந்து வாடி
சந்தைப் பேட்டை உள்ள வாடி
ஒடி நல்லா மெதுவா வாடி
ஓடிப் போவலாம் தஞ்சாவூரு."
"நீயும் நானும் நேசம் தாண்டி
வயித்திலே ஆறு மாசம் தாண்டி
உங்க மாமன்காரன் கண்டுக் கிட்டா
அது பெரிய மோசம் தாண்டி" (ஆண்)

"ஆசை வைச்சேன் உம் மேலே
அரளி வைச்சேன் தோட்டத்திலே
பூ வைச்சேன் கொண்டையிலே
பிரிய மனம் தோணலியே." (பெண்)

இவ்வரிகளுக்குச் சொந்தக்காரர்: பச்சையப்பா.

## நெட்டி

தண்ணீர் உள்ளே இருக்கும் கோரைமாதிரி தெரியும் நெட்டிச் செடியைக் கிராமங்களில் விலைக்கு வாங்கி வந்து தங்கள் கலைத் திறனைக் காண்பிக்கிறார்கள். நெட்டிச் செடியின் மேலிருக்கும் பகுதியை மடமடவென்று சீவிக் கண் முன்னாலேயே சின்னச் சின்னப் பூ செய்து பிரமிக்க வைக்கிறார்கள். இது தவிர, கண்ணாடி, ஜிகினா வேலையும் செய்வது உண்டு.

இதில் மிகப் புகழ் பெற்றவர் திரு வேணு கோபாலன். பழைய போர்ட் டிரஸ்ட் சேர்மன் திரு டி. கே. பழனியப்பன் துவக்க காலத்தில் மிகுந்த ஆதரவு அளித்ததன் ஞாபகமாகக் கடையில் அவர் படம் காட்சி அளிக்கிறது.

நெட்டியில் செய்யப்பட்ட ரோஜா மாலையும், தஞ்சைப் பெரிய கோயிலும் மிகப் பிரபலம்.

நெட்டிச்செடியை நிறைய வாங்கி ஸ்டாக் வைத்துக் கொள்ள முடியுமோ?

அதிகபட்சம் ஓராண்டு வைத்துக் கொள்ளலாம். அதற்குப் பிறகு உள்ளே இருக்கும் அரக்கு உதிர்ந்து போய்விடும்.



கரகக் கலைஞர்கள்

இவர்கள் பெருமையுடன் சொல்லிக் கொள்ளும் சாதனை: சார்லஸ் இளவரசர் வந்தபோது, அவருக்கெனத் தனியாகச் செய்து அனுப்பப்பட்ட நெல், ஜவ்வாது, சந்தனம் சேர்ந்த மாலை.

## வீணை

தஞ்சாவூர் வீணை மிகப் புகழ் பெற்றது. சிறிய அறையில் உட்கார்ந்து வீணை 'செய்து' கொண்டிருக்கும் திரு கோவிந்தனைச் சந்திக்கிறோம்.



தஞ்சாவூர் வீணையை உருவாக்குகிறார் கோவிந்தன்

''வீணையை எந்த மரத்திலால் செய்கிறார்கள்?''

''பொதுவாகப் பலா மரத்திலிருந்துதான். அதிலேதான் நாதம் நன்றாக வரும். பலா மரம் கிராமங்களிலிருந்து வாங்குகிறோம். நடுவில் ஒட்டப்படுகிற 'செலாய்ட்' பகுதி பம்பாயிலிருந்து வரவழைத்து அதில் பள்ளம் வெட்டி, பிறகு வண்ணப் பூ வேலை செய்கிறோம். வீணைக் கம்பிகள் கூட பம்பாயிலிருந்துதான் தருவிக்கப்படுகின்றன.''

''வீணைகளில் வித்தியாசம் உண்டா?''

''ஒட்டு வீணை ரூ. 900 ஆகிறது. ஏகாந்த வீணையில் நாதம் அதிகமாக இருக்கும். இதன் விலை ரூ. 1500. ஒரு வீணை செய்யக் சுமார் 25 நாள் பிடிக்கும்.''

''உங்களுக்கு ஏதாவது குறை உண்டா இந்தத் தொழிலில்?''

''சொல்றதுக்கு வருத்தமா இருக்கு. சில பேர் குறைந்த விலைக்கு விற்று, தொழிலுக்குப் பாதிப்பு ஏற்படுத்தறாங்க. அதாவது 'தூங்கு மூஞ்சி' மரம் வாங்கி அதில் வீணை செஞ்சு பாலிஷ் போட்டு ஏமாற்றி விடுகிறார்கள். உங்க மாதிரி ஆளுங்க வெளிப்பார்வைக்குக் கண்டுபிடிக்க முடியாது. நாங்கள் கண்டு பிடித்து விடுவோம்.''

''வீணைக் கச்சேரி கேட்பதுண்டா? யார் கச்சேரி பிடிக்கும்?''

''சிட்டி பாபு, பிச்சுமணி — இவங்க வாசிப்பிலே இனிமை இருக்கும். பாலசந்தர் கிட்டே கம்பீரமான நாதம் இருக்கும். தயாரிக்கிற வீணைக்கும் அவங்க வாசிப்புக்கும் அவ்வளவா சம்பந்தம் கிடையாது. வாசிக்கிற முறையில்தான் வித்தியாசம்.''

அண்மையில் மலேசியாவுக்குக் கூட ஒரு வீணை செய்து அனுப்பியிருக்கிற இந்தக் கலைஞர் தம் மூத்த பையனையும் இதே தொழிலில் புகுத்தியிருக்கிறார்.

## தட்டு

● 48 வயதான வி. ராஜகோபாலன் கடந்த 24 வருடமாக இந்தத் தொழில் செய்து வருகிறார். பரம்பரைத் தொழிலாம். குறிப்பாகப் பத்தர் ஜாதி மாத்திரம்தான் இந்தத் தொழிலில் ஊறிப்போனவர்கள்.

இத்தாறு பேர் இவர் கீழ் பணி புரிகிறார்கள். ''முன்பு சென்னை வி.டி. ஐ.யிலிருந்து ரெகுலராக ஆர்டர் வருவதுண்டு. இப்போ வருவதில்லை. பூம்புகாருக்குச் சப்ளை செய்கிறோம். தவிர தனி நபர்களிடமிருந்து வரும் ஆர்டர்களையே இப்போது நம்பியிருக்கிறோம்'' என்கிறார் ராஜகோபாலன். குறைந்தபட்சம் 22 ரூபாயிலிருந்து 900 ரூபாய் வரை விதம் விதமான வேலைப்பாடுகள் அமைந்த தட்டுக்கள் இருக்கின்றன.

ஒரு யந்திரம் இருக்கிறது - வெள்ளியைத் தகடாக மாற்ற.

''லாபம் நிறைய இல்லை. வெள்ளியை வாங்கி ஸ்டாக் பண்ண வேண்டியிருக்கிறது. ஒரு கிலோ வெள்ளி ரூ. 3000. அப்படி வாங்கினால் ஆறுயிரம் ரூபாய் வேலைதான் செய்ய முடியும்.'' என்று சொல்கிறார் ராஜகோபாலன். — சிறிது வருத்தத்துடன்.

✕ தஞ்சாவூர்த் தட்டு தயாராகும் பட்டறை



✕ நெட்டி மாலை தயாராகிறது



நீங்களே கணக்கிட்டு பாருங்கள்!

300 கிராம்
ரூ. 3·20

ஒரு சாதாரண டிட்டர்ஜண்ட்
சலவை கட்டியை விட
எடையோ
இரண்டு மடங்கு
விலையோ
சில்காசுகள்தான் அதிகம்

# டோட்டல்

நீல டிட்டர்ஜண்ட் சலவை பார்







சுலபமான
சலவைக்கு
5 சிறிய பகுதிகள்

உண்மையான முதல்
டிட்டர்ஜண்ட் பார்!

டோட்டல், நீல டிட்டர்ஜண்ட் சலவைக் கட்டியின் அதிக வெண்மையையும், சலவை பார் சோப்பின் சௌகரியத்தையும் கொடுக்கிறது.

சிக்கனமாக சலவை செய்ய இதை 5 சிறிய பகுதிகளாக்கி உபயோகிக்கலாம்.

எடையோ இரண்டு மடங்கு
விலையோ சில காசுகள்தான் அதிகம்!

நீங்கள் 125 கிராம் எடையுள்ள சாதாரண டிட்டர்ஜண்ட் கட்டியை என்ன விலைக்கு வாங்குகிறீர்கள்?
300 கிராமின் விலை ரூ. 3.20 என்றால் 250 கிராம் டோட்டலின் விலை ரூ. 2.67 தான். அதாவது ஒரு சாதாரண சலவைக் கட்டியைவிட எடையோ இரண்டு மடங்கு, விலையோ சில காசுகள் தான் அதிகம்.

தமிழ் நாடு, பீஹார் மற்றும் ஆந்திர பிரதேஷ் மாநிலங்களில் மட்டும் கிடைக்கும்.

MCA-TDB-51-Tam

---

கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள் : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

# விவசாயத்தில் சில வேதனைகள்!

விவசாய பூமி தஞ்சையில் சிறுவிவசாயி களின் தற்போதைய நிலை என்ன என்று விவசாய சங்கத் தலைவர் திரு திருஞான சம்பந்தம் அவர்களை விசாரித்தபோது, நமது கருத்துக்களை மடை திறந்தது போல் கொட்டினார். அவற்றிலிருந்து ஒரு பகுதி:

- தமிழ்நாடு அரசு நிர்ணயித்திருக்கிற விவசாயக் கூலி, ஒரு நாளைக்கு ஆணுக்கு 9 ரூபாய் பெண்ணுக்கு 7 ரூபாய். மொத்தமாக மூன்று, நாலு மாசத்துக்குத்தான் வேலை—குறுவை, சம்பா, தாளடி எல்லா விளைச்சலையும் சேர்த்து. மற்ற நாட்களில் குறைந்த கூலிக்கு, கிடைத்த வேலையைச் செய்வார்கள். வருடம் முழுவதும் அவர்களுக்கு வேலை கிடைக்கச் சிறு தொழிலகங்கள் இருந்தால் விவசாயக் கூலி குறைய வாய்ப்புண்டு.

- மண்வெட்டி, கலப்பை, டீசல், ரசாயன உரம் எல்லாம் ஏகமாக விலை ஏறிவிட்டது. ஆனால் நெல் கொள்முதல் விலையை மட்டும் உயர்த்த மாட்டேன் என்கிறார்கள். நெல் கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு 115 ரூபாயிலிருந்து 150 ரூபாய்க்கு உயர்த்தக் கோரித் தீர்மானம் போட்டிருக்கிறோம்.

- பஞ்சாலை, நூற்பாலை முதலிய ஆலை முதலாளிகள் விலை உயர்த்த வேண்டும் என்று சொல்லாமலேயே விலையை உயர்த்துகிறது அரசாங்கம். ஆனால் நெல் கொள்முதல் விஷயத்தில் மட்டும் ஏனோ இந்தப் பாரபட்சம்? ஒரு குவிண்டால் பருத்தியை ரூ. 480க்கு வாங்கி, நூலாக்கி, ரூ. 4800க்கு விற்கிறார்கள்!

- மேற்பார்வை, உற்பத்திச் செலவு எல்லாம் கணக்கிட்டால் ஒரு விவசாயத் தொழிலாளிக்குக் கூலியாகக் கிடைப்பதுகூட 5ஏக்கர் நிலம் உள்ள விவசாயிக்குக் கிடைப்பதில்லை. அதுமட்டுமல்ல. வேலையின் தரம் குறைந்து விட்டது. ஆனால் கூலி உயர்ந்திருக்கிறது.

- 1981—82ம் ஆண்டுக்கு ரசாயன உற்பத்திக்கு மான்யமாகத் திட்டமிட்டிருந்த 679 கோடி ரூபாயை, 466 கோடி ரூபாயாகக் குறைக்கத் திட்டமிட்டிருக்கிறது அரசு. கூடவே, உரத்திற்கு டன்னுக்கு 350 ரூபாய் விலை உயர்த்தி யிருக்கிறது. இதே போல் பெட்ரோல், டீசல், மண்ணெண்ணெய் எல்லாவற்றுக்கும் உயர்த்தி யிருக்கிறது. ரசாயன உர விலை உயர்வை ரத்து செய்ய வேண்டும். ரசாயன உரத்துக்கு வழங்கி வந்த மான்யத்தைக் குறைக்கக் கூடாது. ரசாயன உரத் தொழிற்சாலையைத்தேசஉடைமையாக்க வேண்டும். டீசல், பெட்ரோல் விலையைக் குறைத்துக் கொடுக்க வேண்டும். நிபந்தனையின்றிச் சாகுபடிக்குப் புதிய கடன்கள் கொடுக்க வேண்டும்.

- விவசாயக் கூலிகள் ஹார்லிக்ஸ், க்ளுகோஸ் எல்லாம் சாப்பிட முடியாது. கள் தான் இதை ஈடு செய்கிறது. வேலை முடிந்து வீட்டுக்கு வரும் விவசாயத் தொழிலாளிக்குக் கள் நிச்சயம் தேவைப்படுகிறது. வந்ததும் படுத்து விடுகிறான். குடும்பக் கட்டுப்பாட்டுக்கு இது பெருமளவில் உதவி செய்கிறது!



✖ திரு திரு ஞானசம்பந்தம் விவசாய சங்கத் தலைவர்

- கள்ளால் இன்னொரு நன்மையும் இருக்கிறது. விவசாய உற்பத்திக்குத் தொல்லை தரும் பூச்சிகள் எல்லாம் பானையிலும் தென்னையிலும் கட்டியிருக்கும் கள் கலயத்தில் விழுந்து விடுகின்றன!

# பிலிப்ஸ்

ரு 1 690 *

## இப்போது பிலிப்ஸ் வழங்குது ஒருங்கிணைந்த சர்க்யூட்!
## அது அளவில் சிறிது, ஆற்றலில் பெரிது; அதிக தெளிவான ஒலி.

பிலிப்ஸ், எலக்ட்ரானிக் உலகில் வழங்கிடும் புதிய விந்தை: ஒருங்கிணைந்த சர்க்யூட்— மிகத் தெள்ளத் தெளிவான ஒலி வழங்குது—மொத்தத்தில் நம்பகமானது பல்லாண்டுகளுக்கு.

அத்துடன், புதிய பிலிப்ஸ் பவர்-காம்பாக்ட், விரிவான ஃப்ரீக்வன்சி ரேஞ்ச். எனவே, ஒலிப்பதிவை மீண்டும் அப்படியே கேட்கலாம்—அதன் வாட்டேஜ் வரிசையில்.

சிறப்பம்சங்கள்:

- விரிவான ஒலி முழக்கத்திற்கான 18 வாட்டுக்கள்
- 2 மைக்ரோ குருவ் ஸ்டைலி,
- டேப் ரிக்கார்டர்/ரேடியோவிற்கு தனித்தனியே ஆம்ப்ளிஃபையரை இயக்க முடியும்.
- ரிக்கார்டு முடிந்ததும் தானே நிறுத்திக் கொள்ளும் அமைப்பு.

உங்கள் பிலிப்ஸ் டீலரிடம் இலவச செயல்முறை விளக்கம் பெறலாம்.

OBM-6745 TM

* எக்சைஸ் தீர்வை உட்பட அதிகபட்ச சில்லறை விலை. மாநில விற்பனைவரி மற்றும் இதர உள்ளூர் வரிகள் தனி

## புதிய பிலிப்ஸ் பவர் – காம்பாக்ட் ஸ்டீரியோ ஸிஸ்டம் ஏ எஃப் 582




பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி.

# ராஜபார்வை-81



சரபோஜி மன்னனின் வழி வந்த தற்போதைய ராஜாராம் ராஜா, சாதாரண மனிதராகக் காட்சியளிக்கிறார். பாழடைந்த மண்டபம் மாதிரி இருக்கிறது, இவர் வசிக்கும் 'அரண்மனை'. நுழைகையில் இருட்டும், வௌவால் நாற்றமும் விழிகளையும் நாசிகளையும் தாக்குகின்றன. தட்டுத் தடவி மேலே ஏறி, ராஜாவைப் பார்க்க வேண்டும் என்கிறோம்.

''நான்தான் ராஜா. ராஜாராம் ராஜா! என்ன வேண்டும் உங்களுக்கு?''

அமர்ந்திருப்பது சிம்மாசனமில்லை. அணிந்திருப்பதும் அரைக் கைச்சட்டை, வேட்டிதான். மெலிந்த, கச்சலான தேகம். நாலு நாள் தாடி. மூன்றாவது சரபோஜியின் முதல் மனைவியின் பேரனும்.

''22 சத்திரங்கள், 88 கோயில்கள் எங்கள் அரண்மனையைச் சேர்ந்தது. அதில் முக்கியமானது மாரியம்மன் கோயில். நாங்கள் எங்களை அந்நியர்களாக நினைத்துக் கொண்டதே கிடையாது. தமிழர்களோடு இணைந்து தமிழை ஆதரித்தோம். பரத நாட்டியத்தை வளர்த்தோம். திருப்பனந்தாள் மடத்துக்கு நிறைய உதவி பண்ணியிருக்கிறோம். இங்கே துகாராம், ராமதாஸ் முதல் இன்றைய காமகோடி பீடம் சங்கராச்சாரியார் வரை விஜயம் செய்திருக்கிறார்கள்...''

அரசருக்கு இன்றைய அரசியல் அத்துப்படி. இவரது உறவினர்கள் இப்போதும் பூனாவில் இருக்கிறார்கள். பெண்ணுக்குப் பிள்ளையோ, பிள்ளைக்குப் பெண்ணோ அங்கிருக்கும் அரச பரம்பரையிலேயே எடுக்க

:: ராஜாராம் ராஜா

✖ துளஜேந்திரராஜா தமது புதல்வர்களுடன்



வேண்டுமாம். ''ஆனால் என் பிள்ளை விஷயத்தில் அப்படிச் செய்யவில்லை. மாறி விட்டேன்.... மாறத்தானே வேண்டும்?'' என்கிறார் ராஜாராம் ராஜா. மகன் சென்னை போர்ட் டிரஸ்ட்டில் டெபுடி டிராஃபிக் மானேஜர்:

''இந்த அரண்மனையில் ஏதோ சுரங்க வழி இருப்பதாகவும், அங்கே அபூர்வமான ஓவியங்களைச் சமீபத்தில் தொல்பொருள் இலாகாவினர் 'கண்டுபிடித்த'தாகவும் செய்தி அடிபட்டதே?'' என்று கேட்டபோது ராஜா சிரித்தார். ''ஏதோ - இந்த இடிபாடான அரண்மனையையாவது எங்களுக்கு இருப்பதற்கு விட்டு வைத்திருக்கிறார்களே என்று பார்த்தால், இதையும் எடுத்துக் கொள்ள என்ன வழி என்று கண்டு பிடித்திருக்கிறார்கள்! இங்கே சுரங்க வழியும் இல்லை. ஓவியங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டவையும் அல்ல!'' என்றார் அங்கலாய்ப்புடன்.

அறை முழுக்கப் பழையபெயிண்டிங்குகள். புராதனமான வஸ்துக்கள். டீ.வி. ஒன்றுதான் நவீனமானது. இருளும் அடைசலுமான அறையில் ஒரு ஜன்னல் அருகே அரைகுறை வெளிச்சத்தில்தான் ராஜா நாளிதழ் படித்துக் கொண்டிருந்தார்...

இவருக்குச் சற்று நேர்மாறான பாணியில் காணப்படுகிறார் இளையவர். இளையவர் என்றால் அறுபதைத் தாண்டியவர். ஆனால் அரண்மனையின் இன்னொரு பகுதியில் இருக்கும் இவரது 'போர்ஷன்' மட்டும் கொஞ்சம் விஸ்தாரமாக, பழைய அரண்மனையின் சாயலை இழக்காமல் இருக்கிறது. இவரது பணியாளர்கள் கீழே மேசை நாற்காலிகள் சகிதம் அமர்ந்திருந்து நம்மை வரவேற்று மேலே அனுப்புகிறார்கள். அரண்மனையைச் சேர்ந்த நிலங்களின் தஸ்தாவேஜுகள் கருள் கருளாக அலமாரிகள் நிறைய அடுக்கி வைக்கப் பட்டிருக்கின்றன.

துளஜேந்திர ராஜாவுக்கு மெலிந்த உடல். மெல்லிய குரலில் நிதானமாகப் பேசுகிறார். வெள்ளை பைஜாமாவும் ஜிப்பாவும் அணிந்திருந்தார். போட்டோவுக்கு அமரச் சொன்னபோது மகன்களையும் அழைத்தார்.

(ஒரு மகன் ஐ.ஓ.பி.யில் பணியாற்றுகிறார். இன்னொருவர் சென்னையில் டீ.வி. ஷோரூம் வைத்திருக்கிறார்.)

கீழே ஆயுத பூஜைக்காகப் பரம்பரையாக வந்த, அரண்மனையைச் சேர்ந்த ஈட்டிகளும், வாள்களும் சந்தன – குங்குமக் கீற்றுக்களுடன் அலங்காரமாக வைக்கப் பட்டிருந்தன. மேலே, அந்தக் கால ஓவியங்களுடன் துளியும் ஒட்டாமல் காணப்பட்டவை, இன்றைய ப்ரூஸ்-லீயின் ஆவேசமானபடங்கள் இரண்டு!

இவரைக் காணவும், இவருடன் உரையாடவும் நிறையப் பேர்வருகிறார்கள். மராத்திச் சமூகத்தைச் சேர்ந்த டாக்டர் ஒருவர் வந்திருந்தார். மராத்திக் குடும்பங்களில் உள்ள குழந்தைகள், மராத்தியில் பயில வழிவகை இல்லாமல் இருப்பதைத் தெரிவித்துக் கொண்டார், வருத்தத்துடன். (முன்பு பள்ளிகள் சிலவற்றில் மராத்தி வகுப்புக்கள் இருந்தனவாம்.)

முன்னவரைவிடச் சற்று வசதியாக இருப்பவராகத் தோன்றினார் துளஜேந்திர ராஜா. வெளியே, அந்தப் பழங்கால அரண்மனைக்குத் துளியும் பொருத்தமில்லாமல் டி.வி.யின் ஆன்டென்னா பெரிய ராட்சஸ சீப்பு மாதிரி உயரே நீட்டிக் கொண்டிருந்தது. (படம் அப்படி ஒன்றும் நன்றாகத் தெரிவதில்லையாம்)

ராஜாக்களை இன்று பார்க்கிறபோது பரிதாபமாகத்தான் இருக்கிறது.

---

## கலைப் புதையல்!

தஞ்சாவூர் என்று, ஏன் பெயர் வந்தது தெரியுமா? தஞ்சாசுரன் என்ற அசுரன் ஆண்ட பகுதி இது. ஒரு கல்வெட்டு கூறும் அபூர்வமான தகவல். இக்கல்வெட்டை முதலில் கண்டு பிடித்தவர் உல்ஸ் என்ற ஜெர்மானியர்.

தஞ்சைப் பெரிய கோயிலைப் பற்றி அனைவரும் ''நிழல் விழாத கோபுரம்'' உடையது என்று கூறுகின்றார்கள். வெறும் புகழ்ச்சிக்காகவே அப்படிக் கூறுகின்றனர். உண்மையில் நிழல் ஜோராக விழுகிறது.

பெரிய அதிசயம் விமானத்தின் உட்பகுதிதான். கருங்கற்களின் எடை கூடி விடக் கூடாது என்பதற்காக வளையல்களைப் போலக் கற்களைச் செதுக்கி ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டியிருக்கிறார்கள். அடிப்பகுதி பெரிய வளையமாக இருக்கிறது. மேலே போகப் போக வளையங்கள் குறுகிக் குறுகிச் சின்னஞ் சிறிய வளையமாக ஒரு கூம்பு போல அருமையாக அடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கும் மேலேதான் 80 டன் எடையுள்ள உச்சிக் கும்பக்கல் இருக்கிறது. சோழனின் கட்டிடக்கலைத் திறமையைப் பறை சாற்றிக் கொண்டிருக்கிறது.

பிரகதீஸ்வரர் விமானத்தைச் சுற்றிலும் உள்ள சுவர்களில் சோழர் கால ஓவியங்கள் இருந்திருக்கின்றன. சுந்தரர் புராணமெல்லாம் ஓவியமாக இருக்கிறது. இதைப் பார்த்துத்தான் சேக்கிழார் பெரிய புராணமே பாடினார் என்கிறார்கள் ஆராய்ச்சி அறிஞர்கள். இவ்வளவு அற்புதமான ஓவியங்களின் மேல் நாயக்கர்கள் தங்கள் கால ஓவியங்களை வரைந்து விட்டனர். தொல் பொருள் ஆய்வுத் துறையினர் ஒரு இரசாயன மருந்தின் மூலம் நாயக்கர் கால ஓவியங்களின் ஒரு பகுதியை அழித்து விட்டுச் சோழர் கால ஓவியங்களைக் காண வழி செய்திருக்கிறார்கள்.

சிவபெருமான் தலபுஞ்பபுடம் முதலாகக் கங்காவதாரணம் வரையான 108 நடன முத்திரைகள் விளங்க நடனமாடியுள்ளார். இவற்றை விமானத்தின் அடிப்பகுதியில் சிற்பங்களாக வடிக்க முனைந்துள்ளனர். ஆனால் 81 சிற்பங்கள் மட்டுமே செதுக்கப்பட்டுள்ளன. -வ. தேணப்பன்



# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

**15**
















என்ன புதிர் போடறீங்க எல்லாரும் சேர்ந்துக் கிட்டு? இன்னும் வேற ஏதாவும் கொண்டுவரச் சொல்லி அட்வான்ஸ் குடுத்துட்டீங்களா?
அமிர்தம், இத்தனை நாள் ஒரு சின்ன நாடகமாடி உன்னை ஏமாத்தி னோம்னு கோவிச்சுக்க மாட்டியே?


அப்புடின்னு, இவங்களோட நீங்களும் சேர்ந்துக்கிட்டுத் தான் நாடகம் ஆடினீங்களா? அதென்ன நாடகம்?
இவளு வேலைக்குப் போற பொண்ணே இல்லேம்மா!
ஆமா அத்தை. ஆபிசுக்குப் போறேன்னு எங்க பிறந்த வீட்டுலதான் போய் உக்காந் திருந்தேன்.


அதான் மயிலாப்பூர்லயும் மந்தவெளியிலயும் பக்கத்து வீட்டு பங்கஜம் பாத்தா ளாமா ஒன்னை? சரி போகட்டும். மாசா மாசம் நீ சம்பளப் பணம்னு கொண்டு வந்தது?
ஆங்... அதுதான் இல்லே! பாத்தியா, நீ கூட ஏமாந் திட்டே. ஒரு பைசாம் பணத்தைத் தொட வேயில்லே!
எங்க வீட்டுல கொடுத்த பத்தாயிரரூபாய் பணந்தான் அத்தை!


ஆமா அமிர்தம், நானே மாசா மாசம் பன்னிரண்டே ரூபாயக் குடுத்து ஒம்கிட்ட குடுக்கச் சொன்னேன்!
அப்போ கல்யாணத் துக்கு முன்னாடி பத் தாயிரூபா அவுங்க வீட்டுல குடுக்கச் சொன்னீங்க! என் கொள்கை என்னவாகுறது?


உன் கொள்கைல கைய வைக்கல அமிர்தம்! பணம் பத்ரமா அப்படியே இருக்கு. நாளைக்கே அதைத் திருப்பிக் குடுத்தி டலாம். அவ மாமன் சும்மாத்தான் நம்பள மிரட்டி னான். கட்டி வைக் கிறதிலே உண்மை யாவே சரி யில்லா இருக் காருன்னு பாத் துத்தான் பத்தாயிர ரூபான்னதும்!


நல்லா விளையாடினீங்க போங்க!
விளையாடற வயசா இது! ஒரு நாடகம் ஆடினோம். ஆடி முடித்தான் என்ன!



# திறந்த வெளிகள்

ஜி.நாராயணன்

முழுசாக இன்னும் பஸ்ஸைவிட்டு இறங்கவில்லை.... அதற்குள் வெட்டிவேர் மணம் வந்து ஆளைத் தூக்கிற்று. படியில் ஒரு காலும் தரையில் ஒரு காலுமாக ஓர் அரை விநாடி நேரம் நின்று அந்த வாசனையைப் பிடித்தான்.

......ம்......அம்மா.....

அது என்ன வாசனை... தாழம்பூவா... மகிழம்பூவா... இன்னதென்று தனியாகப் பிரிக்க முடியாமல் எல்லாம் கலந்திருந்தது. எல்லா ஊர்களிலும்தான் கதம்பம் கிடைக்கிறது... இங்கே மட்டும் இதற்கென்று தனியாக ஒரு மணம் எப்படி வந்தது? மூச்சைத் துளியும் விடாமல் அப்படியே உள்ளுக் கிழுத்துக் கொண்டே இருக்கலாம் போல்...

''...இறங்கு சீக்கிரம்... 'மசமச'ன்னு... எரும்மாட்டு ஜென்மம்.... ம்....''

...கருவேல மரம்... உடல்தான் அந்த மரம் மாதிரி ஒரு கருமையைப் பூசிக்கொண்டிருக்கிறது. பேச்சில் கூடவா 'நான் இருக்கிறேன் – நான் இருக்கிறேன்' என்று அதைக் காட்ட வேண்டும்? வாயைத் திறந்தால் முள்தான் வரவேண்டுமா... அந்த முள் குத்தும் போதெல்லாம் மனம் அவனையும் அந்த மரத்தையும் ஒப்பிட....

ஸ்டாண்டை விட்டு வெளியே வந்ததும் இவள்வருகிறாளா என்று கொஞ்சம் திரும்பிப் பார்த்தான்.

''...இந்தத் தடவை கோவில் – அரண்மனை இரண்டுக்கும் அழைச்சிண்டு போகல்லே பாரு....''

''....அப்பா கிட்டே சொல்லு...''

''போம்மா... அப்பா அழைச்சிண்டு போக மாட்டா...செலவாறதேன்னு கோவிச்சுப்பா...''

...ம்... ஆறு வயசு இன்னும் முடியவில்லை. அதற்குக்கூடத் தெரிந்திருக்கிறது... இப்படியா இருக்க வேண்டும்... வருஷத்துக்கு



''....அம்மா.... கதம்பம் வாங்கல்லியா?''

பூக்காரி வழியை மறைத்தாள்.

''...கல்யாணத்துக்குப் போறோம். கொஞ்சம் பூ வாங்கட்டுமா.....''

அவன் திரும்பிப் பார்த்தான்.

''...இதை விட ஸ்டேஷன் கிட்ட இன்னும் வாசனையா இருக்கும்.... அங்கே வாங்கலாம்....''

இப்பொழுது நேரே கல்யாணச் சத்திரம் போகிறோம்... நடுவில் ஸ்டேஷன் எங்கேயிருந்து வந்தது.. ஓ..இஷ்டமில்லை... ஒரு முழப் பூ அறுபது காசு ஆகுமே... அதுதான்... அதுதான்.... அவள் ஏதாவது சொல்லு 'வதற்குள் அவன் 'விடுவிடு'வென்று முன்னால் போக ஆரம்பித்தான்.

மதில் சுவராக பஸ்கள் நின்றிருந்தன.

ஒரு கையில் சாக்குப் பையின் கனம் அழுத்திற்று. மற்றொன்றை ராஜு பிடித்திருந்தான். இரண்டும் கெட்டான்...தூக்கு வதை எப்போதோ தாண்டிவிட்ட வயது... அதற்காக 'விறுவிறு'வென்று நடக்கவும் வராது. அவன் வேடிக்கை பார்க்கிறபோது பார்த்து – நிற்கிற போது நின்று –. நடக்கிற போது அவன் நடைக்கு நடக்க வேண்டும்.

''....அப்பா எங்கேம்மா....?''

வேட்டியை மடித்துக் கட்டியபடி அவன் முன்னால் நடந்து கொண் டிருந்தான்....

எப்படியும் இரண்டு மூன்று முறை இங்கே வந்தாகிறது...: கல்யாணம்... சீமந்தம்... காது குத்தல்.... சஷ்டியப்த பூர்த்தி என்று எத்தனை... நேரே பஸ் ஸ்டாண்டில் வந்து இறங்க வேண்டியது. கண்ணைப் பொத்திக் குதிரையைக் கொண்டு போகிற மாதிரி சத்திரத்தைப் பார்க்க நடக்க வேண்டியது. ஒரு நாள் இல்லை ஒண்ணரை நாள் அந்தச் சத்திரத்தில் ஜெயில் வாசம். திரும்பவும் அவசரம் அவசரமாக பஸ் ஸ்டாண்டு... திருவையாறு – வீடு... நாலு இடத்தைப் பார்த்தோம், சந்தோஷப்பட்டோம்... ஒரு கடைக்கண்ணி... கோவில்... பார்க்....

''...பொழுது விடிஞ்சா தஞ்சாவூர் போறே... பொய்க்கால் குதிரை பார்த்தது இல்லேங்கறே... ஆடிண்டே தலையிலே வாழைக்காயை வெச்சு வெட்டறது...தேங்

காயை உடைக்கிறது.... அப்புறம் முத்துப் பல்லாக்கு... ராத்திரி முழுக்க நாதஸ்வரக் கச்சேரி...எங்கே யிருந்தெல்லாமோ பார்க்கிறதுக்கு ஜனங்கள் வரா... பத்து மைல்லே இருக்கே... உனக்கு முடிய மாட்டேங்கிறது. இதுக்குன்னு ஒரு நடை தனியாப் போகணும், பார்க்கணும்.... கல்யாணமும் சீமந்தமும் தான் இருக்கவே இருக்கு....''

எதிர் வீட்டு மாமியிடம் 'சரி' யென்று தலையை ஆட்டியபோது கண்களில் குளம் கட்டியது.



இதற்கெல்லாம் ஒரு மனம் வேண்டும்... ரசனை இருக்கிற மனம்... இவர் மனம் காரில்தான் இருக்கிறது...எப்பப் பாரு. 'செலவாறதே.. செலவாறதே' என்று மூக்கால் அழுகை. ஒரு முழம் கதம்பத்துக்குக் கூட வழியில்லே. அப்படியாவது ஓர் இனிமையான பேச்சு உண்டா... சிரிப்பு உண்டா... ஆபீஸிலிருந்து வரும்போதே முழ நீளம் முகத்தை வைத்துக் கொண்டு வர வேண்டியது.. ஏதாவது கேட்டால் குத்துகிற மாதிரி பார்வை... பேச்சு...



**ப**ரதேசக் கோலம் புறப்பட்டுக் கொண்டிருந்தது.

''வா....வா....தர்மா... வாங்கோ மாப்பிள்ளை....''

கல்யாண ஓட்டத்தில் கொஞ்சம் நின்று இவர்களுடன் பேசினார் ரங்கநாதன்.

அப்பா இருந்தவரை இந்த ரங்கநாதன் அடிக்கடி வந்து கொண்டிருந்தார். ஒருமுறை அப்பாவின் கச்சேரி தெற்கு ராஜ வீதியில் நடந்தபோது பரிச்சயமாயிற்றும்... அப்புறம் நினைத்துக் கொண்டால் வந்து விடுவார்.... '...உங்க காம்போதியைக் கேட்டு நாளாச்சு... கொஞ்சம் வாசியுங்கோ....' என்று உட்கார்ந்து விடுவார். 'ஆஹா...ஆஹா....' என்று அதிலேயே உருகி.. அப்புறம் ஒரு நாள் பைரவி, இன்னொரு நாள் தோடி... இந்த முறை ஆராதனைக்கு வந்தவர் வீட்டுக்கு வந்து விட்டார். ''நம்ப உமாவுக்குக் கல்யாணப் 'பத்திரிகை அனுப்பறேன்... அவசியம் வந்து சேரு....''

''...ஒரு நிமிஷம்....''

இவர்களை விட்டு விட்டு அவசரம் அவசரமாகப் பந்தலுக்கு வெளியே ஓடினார். ஒரு பச்சை நிறக் கார் வந்து நிற்க, கதவு திறந்தது. ஜிப்பாவும், பைஜாமாவும் தெரிந்தது. யார்....? எங்கேயோ பார்த்த முகமாக... யாரு... சந்துருவா... அவன்தான்....!

கதவு திறந்தே இருக்க, காரிலிருந்து கொஞ்சம் இரட்டைநாடியாக ஒரு பெண் இறங்கினாள்.

''வாங்கோ...வாங்கோ....'' ரங்கநாதன் குழைந்தார்....



....ம்... எட்டு அழகிலே ஒரு சொட்டு அழகு இல்லே... இவளைப் போய்ப் பண்ணிண்டு இருக்கானே... உயரம் இல்லே. குள்ளம்... முகம் உருண்டை இல்லே சதுரம்... மூக்கு எடுப்பா இல்லே... நிறமும் இல்லே... அதிர்ஷ்டம்... எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் அது நிறைய இருக்கு...

சந்துரு சிலரிடம் நின்று பேசினான். சிரித்தான். அதில்தான் எத்தனை விதம்...!

''...இதுதான் வீணை சந்துரு...''

மௌனமாக இருந்தாள்... அவளுக்குத் தெரிந்த சந்துருவிடம் இவ்வளவு கம்பீரம் இருக்கவில்லை. புகழ் இருக்கவில்லை. ஜவ்வாதுப் பொட்டு இல்லே. பயந்து பயந்து ஓர் ஓரமாக உட்கார்ந்து பழையதை அள்ளிப் போட்டுக் கொள்ளுகிற சந்துரு... வீட்டில் எடுபிடி வேலே செய்கிற—அப்பாவுக்கு வேஷ்டி துவைத்துப் போடுகிற சந்துரு... வீணையைத் துடைத்து வைத்து, அப்பா வாசித்தால், எதிரே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து... இந்தச் சந்துரு அவரிடம் எத்தனை வசவு, அடி, உதை, குட்டுவாங்கியிருக்கிறான்.

இந்த மண்டூகத்தைத் தன் தலையில் கட்டப் பார்க்கிறாரே என்று அப்பொழுது அப்பா மேல் வந்த கோபம்... அரைக்காசுக்குப் பதில் முந்நூறு ரூபாய் வாங்குகிறவனுக்குப் பார்த்துக் கொடுத்தார். ஆனால், பால் கணக்கு, மோர் கணக்கு, வாடகை, மளிகைக் கடை என்று எல்லாம் இழுக்கிற இழுப்பில் சம்பளம் மூக்கு ஒட்டைக்குக்கூட காணவில்லே. ஒவ்வொரு மாதத்தையும் தள்ளுகிற பாடு?சிவன் அறிந்து போகும்...

பெண்ணும் பிள்ளையும் மாலே மாற்றி, ஊஞ்சலுக்கு வந்தார்கள்.

''...யாராவது பாடுங்கோ...''

சட்டென்று யாரும் முன்வரவில்லே. கமுசா... நீ பாடு... நீதான் பாடுடி... சிரிப்புகள்....

''...கண்ணூஞ்சலாடி நின்றார்....''

அவ்வளவு நாணல் கோணல்களையும் அடக்கிக்கொண்டு அவள் குரல் கணீரென்று எழும்பிற்று. நாதஸ்வரக்காரர் அதை வாத்தியத்தில் அழகாகத் திருப்ப...

அடுத்த அடி பாடும்போது சந்துருவைக் கவனித்தாள். அவனும் இவளைப் பார்ப்பது தெரிந்தது.

''...சௌக்கியமா?''

''...ம்....''

இந்தப் பேச்சு கூடத்தில் நடந்தது.

''...உன் குரல் அப்படியே இருக்கு...''

அவன் பேசாமல் இருந்தான்.

''...அம்பி. . உன் பேரு என்ன?''

''....ராஜு...''

''பேஷ்... நல்ல பேர்...''

ஆச்சரியமாகத்தான் இருந்தது... இவன் பேச்சில் ஒரு விதரணை... சாந்தம்... நீட்டல் குழைவு... எல்லாம் எப்படிச்சேர்ந்து கொண்டன... அசுர சாதகம் பண்ணிப் பண்ணி, பேச்சும் ராகம் மாதிரி இனிமையாக அமைந்து விட்டதோ...!

'படபட'வென்று கெட்டி மேளம் கொட்டக் கணவனை அவள் அவசரமாகத் தேடிப் பிடித்தாள்.

"...இருபது ரூபாயாவது கொடுக்கணும். அந்த நாளிலே ரொம்ப உதவி பண்ணி யிருக்கார்..."

"உங்க அப்பா போற போது ரெண்டு வீணையை வெச்சுட்டுப் போன மாதிரி, ரெண்டு வேலி நிலத்தையும் வெச்சுட்டுப் போயிருந்தார்னு, நீ கேட்கிறபோதெல்லாம் எடுத்துத் தட்டலாம்..."

....கருவேலமரம்...

அவன் குரல் சற்று ஓங்க, நாலைந்து பேர்கள் கவனிப்பது தெரிந்தது. அவள் சட்டென்று குரலைத் தழைத்தாள்.

"...சரி குடுங்கோ..."

அவன் பர்ஸைத் திறந்து சிகப்பு நோட்டு ஒன்றை வெளியே எடுத்தான்.

"...ரெண்டு ரூபாயை எப்படிக் கொடுக் கிறது... பத்து ரூபாயாவது..."

"அப்ப ஊருக்கு நடந்துதான் போகணும்!"

'படபட'வென்று வந்தது... வாங்காமல் வேகமாக உள்ளே போனான்.

"**கை**யிலே கொடுங்கோ...."

கலத்தில் லட்டு விழ இருந்தபோது குழந்தை இடது கையில் வாங்கிக்கொண் டான். உருண்டு விடாமல் வைத்தான்.

"..இப்பவே தின்னுடு..."

"இல்லேம்மா... அப்புறமா... நம்பள் ளாம் கோயிலுக்குப் போறபோது..."

பிறகு அப்பளம் வந்தது. அதையும் கை நீட்டி வாங்கினான்.

இவனுக்கு ஒன்றும் வேண்டி யிருக்கவில்லை. என்னமோ சாப்பிட்டான்.. எழுந்தான்... கை அலம்பினான்.

கொஞ்சம் முன் யோசனையுடன் இருந் திருந்தால் இவ்வளவு அவலம் நடந்திருக் காது... பின் புத்தி... ஒரு முழம் கதம் பத்துக்குத் திண்டாட வேண்டாம்...

பழம் புடவையை மாற்றி மாற்றிக் கட்டிக் கொள்ள வேண்டாம்... பத்து ரூபாயாவது கொடு என்று பிச்சைக்காரி மாதிரி கெஞ்ச வேண்டாம்... எப்பொழுது வெடிக்குமோ— எப்பொழுது குத்துமோ என்ற பயம் இல்லா மல் வாழ்க்கையில் கொஞ்சம் சிரிப்பையும் சந்தோஷத்தையும் அனுபவித்திருக்கலாம்... மனைவியைப் பெயர் சொல்லி அழைக்கிற இதம் — கூட்டத்தில் கையைப் பிடித்துக் கொண்டு அழைத்துச் செல்கிற குணம்...ச்சு..

கருவேல மரத்தை விட்டு வேப்ப மர நிழலில் காற்று வாங்குகிற மாதிரி ஒரு விநாடி நேரம் கண்களைச் சுற்றிற்று... வெட்டிவேர் மணம் மாதிரி... ம்... அப்பா....

அந்தச்சுகானுபவம் சட்டென்றுஅறுபட....

"...எதற்குடா அழறே?..."

"...லட்டு...லட்டு..."

அவன் பேச்சுவராமல் உள்பக்கம் கையைக் காட்டினான்.

அவனை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள். இலையை எல்லாம் எடுத்து விட்டு சாக்கைப் போட்டு 'சர் சர்' என்று ஈரத்தைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள்.

"அப்பவே தின்னுடான்னு சொன்னேனே கேட்கல்லே... கையிலே கிடைச்சதை விட் டுட்டு இப்ப என்ன அழுகை... இந்த மாதிரி



வரும் 82ஆம் ஆண்டு ஜனவரி மூன்றும் வாரத்தில் திருவையாறு தியாகராஜர்சமாதிக்குச் செல்பவர்கள், சில மாற்றங்களைக் காணக்கூடும்.

சமாதியைச் சுற்றி மதில் சுவர் எழுப்புகிறார் கள், உள்ளே யாரும் அசுத்தம் செய்து பாழாக் காமல் இருப்பதற்கு.

இசைக்கல்லூரி ஒன்று இங்கே துவக்கப்பட இருக்கிறது. அதற்கான அஸ்திவாரம் போடப் பட்டு, வேலைகள் துரிதமாக நடைபெற்று வரு கின்றன. எத்தனை பொருத்தமான இடம்!

இந்தப் பணியைத் தாம் பொறுப்பேற்றுக் கொண்டிருப்பதால், தஞ்சை கலெக்டர் அடிக் கடி வந்து பார்வையிட்டு விட்டுச் செல்கிறார்.

---

அசட்டுத்தனத்துக்கு நீ அம்மாவைத்தான் கொள்ளணுமா..."

அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வர...

"...எதற்கு அழறான்?"

"...லட்டுப்பா... காணும்...."

"...சமையற்காரர் தெரிந்தவர் தான்.... நான் வேணா உள்ளே போய் வாங்கி வரேன்."

"ஒண்ணும் ஒதிவிடாம மூணு பேர் சாப் பிட்டிருக்கோம்....இது வேறேயா... அல்பம் மாதிரி...."

"யார் அல்பம்...? என் அப்பாவுக்கு நால ரைக் காணி நிலம் இருந்தது.... அல்பமா தேங்காய் மூடிக் கச்சேரி பண்ணல்லே."

"...அந்தப் பவிஷுதான் தெரியறதே."

குழந்தை அழுகையை நிறுத்தி விட்டான். இவர்களைக் கவனித்துக் கொண்டிருந்தான்

பல்லைக் கடித்து, கண்களை நெரித்து அம்மா ஆத்திரப்பட... அப்பாவுக்குக் கோபத்தில் உடலே நடுங்கிக் கொண்டிருந்தது.

இன்று சண்டை ஏனோ அதிகமாக இருக் கிறது. கோவிலுக்குப் போகலாமா — ஊர் சுற்றிப் பார்க்கலாமா என்று கேட்க வாய் இல்லை. கேட்டால் இன்னும் அதிகமாகும்.

அவனுக்குப் புரிந்து விட்டது.

இந்த முறையும் வழக்கம் போலத்தான்... சத்திரம் விட்டால் பஸ் ஸ்டாண்டு... திரு வையாறு... வீடு...!

ஷர்ட்டிங்குகள்
100% பாலியஸ்டர்,
பாலியஸ்டர் பிளண்ட்ஸ்
மற்றும் காட்டன்



சிறந்த ரகங்கள். சரியான விலை.

அதிகாரப்பூர்வமான ஏஜெண்டுகள்: (தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) ஜே அண்டு ஜே எண்டர்பிரைசஸ், 14/F1 அன்சாரி தெரு, ராம்நகர், கோயமுத்தூர் 9. செமி ஹோல் சேல் டிப்போக்கள்: சென்ட்ரல் டிஸ்டிரிபியூஷன் டிப்போ, C.S.&W. மில்ஸ் காம்பவுண்டு, கோயமுத்தூர் 1.

**நேஷனல்**
**டெக்ஸ்டைல்**
**கார்ப்பொரேஷன்**



(தமிழ்நாடு மற்றும்
பாண்டிச்சேரி) லிமிடெட்
ஒரு மத்திய அரசு
நிறுவனம்

10/64 சோமசுந்தரம் மில்ஸ் ரோடு, கோயம்புத்தூர்-641009.

MCA-NTC-75-TAM

செமிஹோல் சேல் டிப்போ, 208 தம்புச் செட்டி தெரு, சென்னை 1. என்டைஸ் ஷோரூம், N.T.C. ஹவுஸ், கோயமுத்தூர் 9. என்டைஸ் ஷோ ரூம, சரவண பவனம் பில்டிங், கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர் 12. என்டைஸ் துணிகள் எல்லா என்டிசி ஷோரூம்களிலும் கிடைக்கும்.

# கடுகு பதில்கள்




✠ கே. ரகுபதி, கும்பகோணம்

கே: இறைவணக்கத்தோடு பெரியார் நினைவு ஸ்தூபி விழா திருச்சியில் நடைபெற்றதாக வானொலியில் கூறியிருக்கிறீர்களே முரண்பாடாக இல்லையா?

ப: கடவுள் இல்லை என்றுதான் பெரியார் கூறியிருக்கிறார். கடவுள் வணக்கம் பாடுவது முட்டாள்தனம் என்று சொல்லவில்லையே.

✠ வி. சதானந்தன், திருபுவனம்

கே: கலபத்தில் மகிழ்ந்து போவீர்களா? நெகிழ்ந்து போவீர்களா?

ப: ஒரே சமயத்தில் மகிழ்ந்தும் நெகிழ்ந்தும் போனது உண்டு. உதாரணமாக, சமீபத்தில் 'காதுல பூ' நாடகம் பார்த்தேன். விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டேயமாக நடித்த சுந்தாவின் திறமையை வியந்தும் நெகிழ்ந்தும் போனேன். இத்தனை திறமையுடன் நடிக்கிறவர் திரை உலகப் புள்ளிகளின் கண்களில் படவில்லையே!

✠ மு. இளவரசு, பிரம்மதேசம்

கே: என் அன்பு மனைவி கலைவாணி இரண்டாவது பிரசவத்தின்போது ஆண் மகவை ஈன்றெடுத்த பின் இறந்து விட்டாள். நான்கு வயது நிரம்பிய மூத்த மகளையும், பச்சிளம் குழந்தையையும் வைத்துக் கொண்டு தனிமரமாய், அலைகடல் கலமாய்த் தத்தளிக்கும் எனக்குத் தாங்கள் கூறும் ஆறுதல் மொழிகள்?

ப: முதலில் என் அனுதாபங்கள். இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு தனியாளாய் பராமரிப்பதுசிரமம்தான். உங்கள் மனைவிமேல் வைத்த அன்பே உங்களுக்கு மனோ பலமும் திண்மையையும் தரும். தரவேண்டும். குழந்தைகளைச் சாக்காகக் காட்டிப் பலர் இரண்டாம் திருமணம் செய்துகொள்ளுகிறார்கள். அதன் பிறகு குழந்தைகளுக்கு ''மூத்தாள் பிள்ளைகள்'' என்ற பட்டப் பெயர் தவிர வேறு ஒன்றும் பிரமாதமாகக் கிடைப்பதில்லை. சிலர் இரண்டாம் மணம் புரிந்த கையோடு முதல் மனைவி குழந்தைகளை ஏதாவது ஹாஸ்டலில் சேர்த்து விடுவார்கள். மறுமணம் செய்து கொள்ளாதீர்கள் என்று சொல்லவில்லை. தீர யோசியுங்கள்.

✠ எம். மாதேஸ்வரன், சங்ககிரி

கே: உங்கள் வீட்டிற்கு வந்தால் என்ன கிடைக்கும்?

ப: அறுசுவை விருந்து (அவசரத்தில் 'சு'வைச் சேர்த்து விட்டேன்!)

✠ எஸ். அன்புமணி, ஈரோடு 9

கே: தோல்விகள் ஏற்படும்போதுதானே நம்பிக்கை அவசியமாகிறது?

ப: மிதமான நம்பிக்கைதான் நம் வாழ்க்கையின் மையம். தோல்வியின்போது ஒரேயடியாக நம்பிக்கையை இழக்கக் கூடாது. வெற்றியின்போது அதிக நம்பிக்கையும் கொள்ளக் கூடாது. நிலைமைகளுக்கு ஏற்ற அளவு நம்பிக்கையுடன் செயல்படுவது சிறந்தது.

பரிசு பெறுபவர் :

எஸ். அன்புமணி
108-பி-1, சின்னமுத்து வீதி,
ஈரோடு—9










எஸ்.ராமன்

ரசிகமணி ரசித்த மணிகள்

# எளிய தமிழில் அரிய தத்துவம்!

ஞா.ப.சோழ

ரசிகமணியிடம் மிருந்த அன்பும் மதிப்பும் கொண்டுள்ள கி. சந்திரசேகரன் அவர்களுக்கு டி.கே.சி. எழுதிய அருமையான கடிதம் ஒன்றை நண்பர் பாஸ்கரத் தொண்டைமான் தமது தொகுப்பிலே வெளியிட்டிருக்கிறார்.

பெரிய பெரிய தத்துவ உண்மைகளை ரசிகமணி எப்படிப் பார்க்கிறார் என்பதற்கு இது ஒரு சான்றாகத் திகழ்கிறது. அதோடு சமகாலத்துக் கலைஞர்களையும் அறிஞர்களையும் ரசிகமணி எப்படி அனுபவிக்கிறார் என்கிற அந்தப் பண்பாட்டையும் இந்தக் கடிதத்தில் தெளிவாகக் காண்கிறோம்:

வண்ணார்பேட்டை
திருநெல்வேலி
18—8—42

அருமை நண்பர் சந்திரசேகரன் அவர்களுக்கு.

நமஸ்காரம்.

தங்கள் கடிதம் இரண்டும் வந்துவிட்டன. உடனுக்குடனே பதில் எழுதவேண்டியது தான். எப்படியோ உள்ளத்திலுள்ள ஆசை கடிதமாக எளிதில் வெளிப்படுகிறதில்லை. அன்று கடிதமும் வந்தது. என்னை ரொம்பவும் அருமை பாராட்டி எழுதியிருக்கிறார்கள். மயிலாப்பூரில் ஒரு குடும்பம் கலைக்கும் பண்பாட்டுக்கும் ஆதாரமா யிருக்கிறதென்றால் தங்கள் குடும்பம்தான். குடும்பத்தில் உள்ளவர்கள் எல்லாரும் என்னிடத்தில் அன்பு பாராட்டி வருகிறீர்கள் என்றால் எவ்வளவு எக்களிப்புக்கு அது காரியம்! சகோதரிகள் சகோதரர்கள் எல்லோரும் உயர்ந்த கலைகளில் ஈடுபட்டிருக்க நானும் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரனா யிருக்கிறதென்றால் எளிதில் கிடைக்கக் கூடிய காரியமா அது? இடைவிட்ட தூரம் ஏதடா — நானூறு மைலாய்ப் போய்விட்டதே என்று ஏங்க-வேண்டியதா யிருக்கிறது. இந்த ஒரு சிறு ஏக்கத்தைக் கொண்டு அளந்து பார்த்தால் ஆங்கிலக் கவி கௌப்பர் எழுதிய அடிகளின் உண்மையான ஏக்கம் இன்னதென்று தெரிய வரும். கப்பல் உடைந்த காரணமாக அலெக்ஸாண்டர் ஸெல்க்கிர்க்கு ஏகாந்தமான தீவு ஒன்றை அடைய நேர்ந்தது. ஒரே பயம். ஒரே ஏக்கம். சத்சங்கங்களைப் பற்றியும், குடும்பத்தினரைப் பற்றியும் நண்பர்களைப் பற்றியும் நினைவு வந்துவிட்டது! பள்ளிக்கூடத்தில் படித்த காரணமாகச் சுவையற்றுப் போயிருக்கவும் கூடும். குற்றம் இல்லை. இப்போது நாம் பள்ளிக்கூடத்தில் இல்லை அல்லவா! அது போதும். செய்யுளைப் பார்ப்போம்.

Society! Friend ship! and love!
Divinely bestowed upon man
Had I the wings of a dove
How soon would I taste you again

நம்முடைய சிறு ஏக்கத்தைக் கொண்டு பார்த்தால்தானே கவியிலுள்ள ஏக்கத்தின் ஆழம் தெரிய வரும்.

கலைமகளில் வந்த என்னுடைய கட்டுரையைத் தாங்கள் ரொம்பவும் பாராட்டியிருக்கிறீர்கள். கௌரவமான ஸ்தானம் கொடுத்தெல்லாம்பாராட்டியிருக்கிறீர்கள். இங்குள்ள நண்பர்கள் சிலர் சிரத்தை எடுத்து வாசித்துப் பார்த்தார்கள். 'தலைகால் புரியவில்லை' என்று சொல்லிவிட்டார்கள். அவர்கள் மேல் குற்றம் இல்லை. என்மேல் குற்றம் இல்லை. தாகூர் மேலும் குற்றம் இல்லை. குற்றம் எங்கேயிருக்கிறது? யூனிவர்ஸிட்டி மேலும் பள்ளிக்கூடங்களின் மேலும்தான். (கட்டிடங்களைக் குறிக்கவில்லை நான்) கலை இன்னதென்று சிறு பையனாக இருக்கும்போதும் சொல்லிக் கொடுக்கவில்லை. கலைச் செல்வனுக்கும் (B.A.) சொல்லிக்கொடுக்கவில்லை; கலை நாயகனுக்கும் (M.A.) சொல்லிக் கொடுக்கவில்லை.

கலை எவ்வளவோ தமிழ் நாட்டில் நெடுகிலும் பிரகாசித்துக் கொண்டுதான் இருக்கிறது. இருந்தென்ன செய்ய? நம்மவருக்கு முப்பது நாளும் கிருஷ்ண பக்ஷம்தான்; ஒரே அமாவாசைதான். ஆசிரமத்தில் உள்ளவர்களுக்கு எல்லாம் பிரகாசம். ''கலைமகள் தாகூர் இதழ். இந்த ஒரு கட்டுரையின் காரணம் பிரமாதமாகி விட்டது'' என்று எழுத உங்களுக்குத்தானே அதிகாரம் உண்டு. தாகூர் சொல்லுகிறதின் பெரிய உண்மையை வேறு யார் அறிந்து கொள்ள முடியும்? ரொம்பத் திருப்தி.

வாழ்க்கையில் எத்தனையோ துன்பங்கள் வந்து இதயத்தைத் தாக்குகின்றன. உண்மை எப்படி இருக்கிறதென்றாலோ இதயம், மனசு என்கிற காரியம் ஒன்றும் கிடையாது. அந்தப் படலங்களுக்குப் பின்னால் நிரந்தரமாய் எங்குமாய் நிற்கும் இறைவனைத்தான் தாக்குகின்றன துன்பங்கள்! கஷ்டப்பட வேண்டியது அவன்தானே? அவனுக்கு இதுவும்



தாம்பரத்தைத் தாண்டித் தமிழ் நாடகங்கள் எடுபடாது என்று சொல்லுபவர்கள், தஞ்சையில் தொடர்ந்து நகைச்சுவை நாடகங்கள் நடத்தி வரும் நவக்கிரஹா கிளப் ஆர்ட்ஸ் நாடகக் குழுவின் செயலர் திரு கே. ரவிகுமாரைப் பார்க்க வேண்டும். ரவிகுமார் இளம் வழக்கறிஞர்; எல்.ஐ.சி யின் சட்ட ஆலோசனைப் பிரிவில் பணிபுரிகிறார், 'ரொட்டி, கப்டா, மச்சான்', 'ஒரு சரத்துணி தண்ணீர் சொட்டுகிறது', 'கடத்தியவனே கண்கண்ட தெய்வம்'—இவை இவர் எழுதித் தயாரித்து நடித்த நாடகங்களில் சில. கரூர் நாரத கான சபா இவரது குழுவிற்கு 'நாடக கலா பாரதி' பட்டம் வழங்கிக் கௌரவித்திருக்கிறது.

ஸ்டேட் பாங்க் பள்ளி கட்ட இவரது நாடக மூலம் வசூல்: ரூ. 40000. திண்டுக்கல் ரோட்டராக்ட் கிளப் வளர்ச்சி நிதிக்கு இரண்டு நாடகங்கள். இந்திய மருத்துவக் கழகத்தின் தஞ்சைக்கிளை வளர்ச்சி நிதிக்காக ஒரு நாடகம்-என்று பொதுப்பணிகளுக்கு இவரது நாடகத் தொண்டு உதவியிருக்கிறது. இவரது குழுவில் பெரும்பாலோர் லாயர்கள், டாக்டர்கள். ''நான் சென்னையில் இல்லாத காரணத்தால், என் எழுத்துத்திறமைக்கும் நடிப்புத் திறமைக்கும் அங்கீகாரம் கிடைக்கவில்லை!'' என்று அங்கலாய்க்கிறார் ரவிகுமார்.

◘ ◘ ◘

## மணிக்கூண்டு

1883-ஆம் ஆண்டு கட்டப்பட்ட மணிக்கூண்டு தமிழகத்திலேயே மிக உயரமானதாகும். 1914 – 1919 வரை நடைபெற்ற உலக யுத்தத்தில் உயிரிழந்த தஞ்சை நகர வீரர்கள் நால்வரின் நினைவுக் கற்களும் இந்த மணிக்கூண்டில் பதிக்கப்பட்டுள்ளன. 202 அடி உயரமான இந்தக் கோபுரத்தின் பெயர் ராணி கோபுரம்.

-வஸந்தா கோவிந்தன்



வேண்டும் இதற்கு மேலும் வேண்டும் என்று சிரித்துக் கொண்டிருக்க வேண்டியதுதானே நமக்கு உரிய செயல்? பிறவி என்கிற உணர்ச்சியிலிருந்துதான் இந்தத் துன்பம் எல்லாம். ஆகவே அந்த வேடிக்கைத் துன்பங்களையும், அவைகளை உண்டாக்கின ஆசாமியையும் (இறைவன்), அனுபவிக்கிற அதே ஆசாமியையும் பார்த்துச் சிரிக்காமல் என்ன செய்கிறது. மாணிக்கவாசகர் சொல்லுகிறார், பிறப்பையும் அந்த உணர்ச்சி காரணமாக ஏற்படும் துன்பங்களையும் என் அறிவைக் கொண்டு சிரிக்கச் செய்வேன்; பிறகு மிஞ்சுவது இறைவன்தானே? அவனுக்கே தொண்டாகும் என் வாழ்க்கை முழுவதும் – என்கிறார்.

''சிரிப்பிப்பன் சீறும் பிறப்பை;
தொழும்பையும் ஈசற்கென்று
விரிப்பிப்பன்''

''இவ்வளவு திடமான உறுதி எனக்கு ஏற்பட்டிருக்கிறது. இதை அங்கீகரிக்க வேண்டாமா? அங்கீகரிக்காமல் அலக்ஷியம் செய்கிறாயே கடவுளே! இது தகாது எந்த விதத்திலும். லக்ஷியம் செய்து என்னைக் காப்பாற்றுவிடில் என்ன செய்வேன் தெரியுமா? வைய ஆரம்பிக்க வேண்டியதுதான்.''

''சிரிப்பிப்பன் சீறும் பிறப்பை;
தொழும்பையும் ஈசற்கென்ற
விரிப்பிப்பன்: என்னை விடுதிகண்டாய்
விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன், தோலுடைப் பிச்சன்,
நஞ்சூண்பிச்சன், ஊர்ச்சுடுகாட்(டு)
எரிப்பிச்சன்.''

இந்த வசவோடு, கசந்த Ironyயோடு

''என்னையும் ஆளுடைப்
பிச்சன் என்று ஏசுவனே!''

மெய்யில் (Reality) திளைத்த மாணிக்கவாசகர், வாழ்க்கை முழுவதையும் சிரிப்பில் போட்டு அப்படியும் இப்படியுமாகத் தாலாட்டுகிறார்.

எவ்வளவு உயர்ந்த லக்ஷியம்.

தாகூரும் இந்த நிலையில் நிற்கிறார். நிற்கவும் முடிகிறது அவருக்கு!

'சிரிப்பை வாழ்க்கையின் அடிப்படையான தருமமாகக் கொள்ள மிகுந்த பாடுபடவும் வேண்டியதில்லை' என்று தாங்களும் நன்றாய்ச் சொல்லுகிறீர்கள். தாங்கள் சொல்வது நம்முடைய பேரறிஞர்கள் கண்ட உண்மையே.

தாங்கள் குறிப்பிடுகிறபடி ஒவ்வொரு வாழ்க்கை அம்சத்தையும் (நல்லதையும் பொல்லாததையும்) எண்ணிவிட்டால் அந்த அம்சம் ஒவ்வொன்றும் தெய்வ மலராய் அழகுடனும் மணத்துடனும் நம் இதயத்தை அலங்கரிக்கும். இந்த அர்ச்சனைக்கான மலர்கள் இறைவனுக்கு உவந்தவை ஆகின்றன. சிரத்தையோடு நேயர்கள் தங்கள் கட்டுரையை வாசித்தால் ரவீந்திரரின் சித்தம் இன்னது என்று தெரிய வரும். அந்தத் திட சித்தத்தினால் விளைவது ஆனந்தந்தான், சிரிப்புத்தான் என்பதும் தெரிய வரும்.

தங்கள்,
டி.கே. சிதம்பரநாதன்

**தஞ்சையில் எதனால் தி. மு. க.வுக்கு இவ்வளவு செல்வாக்கு?**

இக்கேள்விக்கான பதிலைப் பல முனைகளிலிருந்து அறிந்துகொள்ள முயற்சி செய்ததன் பலன்:

- ''ஜாதி அடிப்படையில்தான் தி.மு.க. பிறந்தது. இன்றைக்கும் ஓர் ஏழை ஹரிஜன விவசாயியை எடுத்துக் கொள்ளுங்கள். அவன் சார்ந்திருப்பது கம்யூனிஸ்ட் கட்சியாகத்தான் இருக்கும். சிரம காலத்தில் உதவுவதும் கம்யூனிஸ்ட் ஆகத்தான் இருப்பான். ஆனால் பெயரைத் தட்டிக் கொண்டு போவது மட்டும் தி.மு.க.! காரணம் வாக்கு வன்மை! இன்னொன்று:'' செல்வாக்குள்ள ஜாதி ஹரிந்துக்களைத் தி. மு. க. பணம் கொடுத்துக் கட்சியில் வளைத்துப்போடுகிறார்கள்!'' என்கிறார் பெயர் சொல்ல விரும்பாத **கம்யூனிஸ்ட் தலைவர்** ஒருத்தர்.

- **தி. மு. க., எம். எல். ஏ.** வேறுவிதமாக அபிப்பிராயப்படுகிறார்: ''தஞ்சாவூர், விருதுநகர் இரண்டிலுமே பெரியார் செல்வாக்கு சற்று அதிகம். மேலும் தஞ்சை ஜில்லாவில் பொதுவாக எந்தத் தி.மு.க. எம். எல். ஏவையும் பெரிசா குறை சொல்ல முடியாது. கட்சி ஆட்சியிலிருந்தபோதும் சரி; எதிர்க் கட்சியிலிருந்தபோதும் சரி — ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள்.''

- சர்வோதய ஊழியர் திரு கே. டி. ரங்கநாதன் பனிச்சென்று பட்டியல் போடுகிறார்:
 (1) கருணாநிதி தஞ்சை ஜில்லாக்காரர்.
 (2) செல்வாக்குள்ள தொண்டர்கள்—கட்சி பிரிந்த பிறகும் — இப்போதுகூட தி.மு.க.வில்தான் இருக்கிறார்கள்.
 (3) காங்கிரஸ் திடீரென்று ''மேல்மட்டக் கட்சி'' ஆகிவிட்டது போல் தோன்றியதால் நடுத்தர வர்க்கத்தினர்கள், துடிப்பானவர்கள் — தி. மு. க.விலேயே இருந்து செயலாற்றுகிறார்கள்!



# தஞ்சையில் தி. மு. க.

- ''இப்போதுகூடவா தி.மு.க.வுக்கு செல்வாக்கு இருக்கிறது?'' என்று கேட்டுப் புன்னகை புரிந்தவர் **இ.கா., எம்.பி.** ''கட்சி பிரிவதற்கு முன்பு வேணுமானால் இருந்திருக்கக் கூடும். இப்போது எந்தக் கட்சிக்கும் — தி.மு.க., அ.தி.மு.க. — எங்கள் ஆதரவு பிரதானமாகத் தேவைப்படுகிறதே!''

---

# ராஜாங்கம்



▪ சமீபத்திய ட்ரெண்ட்படி (சிவப்புச் சட்டையுடன்) இருப்பவனிடமிருந்து இல்லாதவனுக்குப் பிடுங்கித் தருவதாய்க் கதை கைதட்டலுடன் ஆரம்பிக்கிறது. ரஜனிக்குஅடுத்தபடிபாமரர்களைஅதிவேகமாய்க்கவர்ந்து வரும் சந்திரசேகர் ஹீரோ.

பணக்காரக்குடும்பத்தின் பெண்ணொருத்தி குடும்ப வக்கீல் 'நண்பரால் (டெல்லி கணேஷ்) கெடுக்கப்பட்டுக் காட்டிக் கொடுக்க மறுக்கிறாள். குடும்பமானத்தைக் காக்கும் பொருட்டு ஒரு நாளைக்குமட்டும் கணவனாய் நடிக்க ராஜாங்கம் காசுக்கு அமர்த்தப்படுகிறான். நல்ல குணம் கொண்ட ரவுடி ராஜாங்கம். ஒரு நாள் என்பது பதினைந்து நாளாக நீண்டு ராஜாங்கமோ உண்மைக் குற்றவாளியைக் கண்டு பிடிக்காமல் போக மாட்டேன் என்று வீட்டில் டேரா அடிக்கிறான்.

அவனைக் கிளப்ப மிரட்டல், ஆள் வைத்து அடித்தல், விஷம் வைத்தல் போன்ற சாம பேத தான தண்டங்கள் பயனற்றுப் போக அந்த அப்பாவிப் பெண்ணோ குழந்தை பெற்றுவிட்டு உயிர் விடுகிறாள். குழந்தையை ராஜாங்கமே வளர்க்கிறான். நமத்துப்போன பட்டாசாய்க் கதை புகபுகக்கிறது.

| | |
|---|---|
| அணுகுண்டு | |
| சங்குசக்கரம் | |
| கம்பிமத்தாப்பு | |
| புஸ்வாணம் | ✓ |
| ஊசிப்பட்டாசு | |

கோப் சந்திரசேகர் படபடவென்று வெடிக்கிறார். அந்தப் பெண் விஜய சாந்தி தன்மேல் இரக்கப்படுவது தெரிகையில் சந்தோஷ சந்திரசேகர் முகத்தில் மகிழ்ச்சி மத்தாப்பு உதிர்கிறது.

வைரமுத்துவின் 'ரோசாப் பூவே', 'உயிரின் நிழலே' போன்ற கவிதை வரிகள் சங்கர் கணேஷின் இசையில் அடிக்கடி காதில் விழும். சரியான இடத்தில் உபயோகிக்கப்பட்ட 'போனி எம்'மின் 'டேக் த ஹீட் ஆப் மி'. டைரக்டர் சக்தி கதைக்கு இன்னும் சக்தி யூட்டியிருக்கலாம்.

# கீழ்வானம் சிவக்கும்

▪ மாமனார்மருமகள் கதை. கண் டாக்டரான மாமா சிவாஜிக்கு மருமகள் சரிதா விரைவில் விம்போசர்க்கோமா(?)வினால் இறக்கப் போவதுதெரிந்துவிடுகிறது. மகன், மருமகளிடம் சொல்லாமல் தவிக்கிறார். ரொம்பத் தவிக்கிறார். over ஆ.

வில்லனும் இல்லாமல் ஹீரோவுமில்லாமல் கையில் அரிவாளுடன் குருடனாக வந்து கண்கொடுக்கும்படி கேட்கிறார் ஜெய் — தன் தங்கையைக் கெடுத்து அவளின் தற்கொலைக்குக் காரணமானவனைக் கண் வந்ததும் கொல்வதே ஜெய்யின் லட்சியம். கெடுத்தவன் போட்டோ கண்டு திடுக்கிடுகிறார் சிவாஜி. அவர் மகன் சரத்பாபுதான் அது.

| | |
|---|---|
| அணுகுண்டு | |
| சங்குசக்கரம் | |
| கம்பிமத்தாப்பு | ✓ |
| புஸ்வாணம் | |
| ஊசிப்பட்டாசு | |

நடிப்பில் சிவாஜிக்கு நல்ல போட்டி சரிதா. சில இடங்களில் சிவாஜி முயல் கணக்கா 'ஓவரா'ய் ஓடினாலும் வேறு இடங்களில் [illegible]கிறார். கடைசியில் போகக் கொண்டு சத்தா[illegible] உயிர் விட அவர் [illegible] ஜெய்க்குப் பொருத்த அந்தக் கண்கள[illegible] போட்டோவைப் பார்க்க[illegible] கண்டு ஜெய் போட்டோவைக் கிழித்தெறிகிறார். வன்முறையைக் கைவிடுகிறார்.

டி.எம்.எஸ். குரலில் கவிஞர் கண்ணதாசனின் அர்த்தமுள்ள பாடல்கள். முதலில் அப்பாவிடம் எகிறிவிட்டு அப்பாவுக்கு எல்லாம் தெரியுங்கறது புரிந்த பின், 'இனி நான் என்ன பண்ணட்டும்' என்று சரத்பாபு புரியாமல் கேட்கும் இடம்இயல்பு.

மூர்த்தி + மகேந்திரன் + சாத்தாடி + அனுமந்து + மனோரமா = நனைந்த சிரிப்பு வெடி.



# அந்த 7 நாட்கள்

| | |
|---|---|
| அனுகுண்டு | |
| சங்குசக்கரம் | |
| கம்பிமத்தாப்பு | |
| புஸ்வாணம் | |
| ஊசிப்பட்டாசு | ✓ |

□ ஒருவனின் காதலி இன்னொருவனுக்கு மனைவி யாகலாம். ஆனால் ஒரு மனைவி இன்னொருவனுக்குக் காதலியாக முடி யாது. பழைய முடிவுதான். ஆனால் ஓல்ட் இஸ்கோல்ட். படத்தின் சிறப்பம் சம் சிறப்பாகச் சொல்லப் பட்ட விதமேக்ஸ்தான். வெல்டன் பாக்யராஜ்.

டியூப் லைட், தத்தி, அப்பாவி, வாத்து மடையன் போன்ற பட்டப் பெயர்களுடன் எதிர்கால மியூஸிக் டைரக்டர் பாலக்காட்டு மாதவன் (பாக்யராஜ்) சென்னையில் குடி யேறுகிறார். வீட்டுக்கார அம்பிகாதொடர்ந்து காதல் கணைகளால் மாதவனை அடித்துப் போட ஒரு கட்டாய இரவில் இருவரும் வீட்டை விட்டு ஓட மாதவனுக்குத் தரும அடியும் அம்பிகாவுக்குக் கட்டாய மணமும் நிகழ்கிறது.

இரண்டாம் மனைவியாக வந்த அம்பிகா முதலிரவில் தற்கொலைக்கு முயல டாக்டர் ராஜேஷ் அவளின் காதலைக்கேட்டு. ''இறக்கப் போகும் என் அம்மாவுக்காக 7 நாள் மனைவி யாக இரு. அதற்குள் உன் காதலனைத் தேடி உன்னைச் சேர்க்கிறேன்'' என்கிறார்.

அந்த ஏழுநாட்களில் அவன் மனம் கொஞ்சம் கொஞ்சமாய் மாறுகிறது. தமிழ்ப் பண்பாடு காப்பாற்றப்படுகிறது.

படம் முழுதும் ஆசான் பாலக்காடு மாத வன் பாக்யராஜும் சிஷ்யன் காஜாஷெரிப்பும் சிரிக்கவைக்கிறார்கள். சிறுவன் காஜா பெரிய ஆள்தான். வசனங்கள் நடிப்பு இரண்டிலும் மையன் ஜொலிக்கிறன். (''சில விஷயத்ல நான் குருவாயிருக்கேன் நீ சிஷ்யனாயிரு ஆசானே'')

மாறுதலான ராஜேஷ். அழகான அம் பிகா. கடைசி வரை நகைச்சுவையாய்க் கொண்டு போய்க் கடைசியில் சீரியஸாக்கும் வித்தை பாக்யராஜுக்குக்கைவந்து விட்டது.

—நளினி சாஸ்திரி





# ராணுவ வீரன்

| | |
|---|---|
| அனுகுண்டு | |
| சங்குசக்கரம் | ✓ |
| கம்பிமத்தாப்பு | |
| புஸ்வாணம் | |
| ஊசிப்பட்டாசு | |

□ கோவில் குருக் களின்மகன்ராணுவ வீரன் அடிதடி ஆரம்பத்துடன் ஊருக்குவருகிறான். ...ம்பைகை காட்டில் பதுங்கி வாழும் தீவிரவாதி ...தக் கண்ணனுடன் ஓடிப்போனவள். ஒத் தக் கண்ணனோ ரா. வீரனின் கல்லூரி நண்பன். தீவிரவாதிகள் கிராமத்துப் பணக் காரர்களைக் கொன்று கொள்ளை அடிக்க வீரன் அவர்களைப் பிடிக்கிறான்.

நமக்கு ஒத்துவராத வடக்கத்தி வாடைக் கதை. உடம்பைத் தேற்றிக் கொண்டுள்ள ரஜனி உதைத்து நொறுக்குகிறார். ஒத்தை யாக, பத்தாக, நூறாக எப்படி வந்தாலும் தனி ஆளாய்ச் சமாளிக்கும் இரண்டாவது தமிழ்க் கதாநாயகன் நம் ரஜனி.

படம் பூரா மேலாக்கில்லாமல், பாவாடை ரவிக்கையுடன் வரும் ஸ்ரீதேவி (கோழிச்-சண்டை முதல் ஒப்பாரி வரை) கறுகறுப்பான அடாவடிப் பெண்ணாய் அட்டகாசம் பண்ணு கிறாள். ரஜனியும் இவரும் தவிட்டு மலையில் உருண்டு புரள்வதும், தடவிக் கொள்வதும், தொடர்ந்து குளித்து மகிழ்வதும் இளைஞர் களுக்குத் தீபாவளி போனஸ். கிருஷ்ணாவின் வசனங்கள் அதைவிடக் கிளுகிளு.

படத்தின் சிறப்பம்சம் பாபுவின் கேமரா தான்.

நிறைய எதிர்பார்க்கச் சொல்லும் சிரஞ் சீவி (1 கண்ணன்). தேங்காய் (சீனிவாசன்) பழகதான். முன்னான் எம். எல். ஏ. ஜுசரி வேலன் — ஜும் சாரி வேலன்.

எண்டர்டெய்ன்மெண்ட் இடைவேளை வரை. அப்புறம் ... தரும் பொறுத வேளை!

# விதுரன் தூது



சூதாடுவதற்குத் தருமனை அழைக்கவேண்டும் என்று துரியோதனன் கூறியதைக்கேட்டுத் திருதராஷ்டிரன் வெஞ்சினம் கொள்கிறான். விம்மியழுது வேதனைப் படுகிறான். விதியை நினைத்து நெஞ்சம் குமுறுகிறான். பாஞ்சாலி தன்னைப் பார்த்துச் சிரித்தாள் என்று சொல்லிய துரியோதனனுக்குத் திருதராஷ்டிரன் அறிவுரை கூறுகிறான்:

''தவறி விழுபவர்
　தம்மையே — பெற்ற
தாயுஞ் சிரித்தல்
　மரபன்றோ? — எனில்
இவனைத் துணைவர்
　சிரித்த தோர் — செயல்
என் னரும் பாதக
　மாகு மோ? — மனக்
கவலை வளர்த்திடல்
　வேண்டு வோர் — ஒரு
காரணங் காணுதல்
　கஷ்டமோ? — வெறும்
அவல மொழிகள்
　அளப்பதேன்? — தொழில்
ஆயிரம் உண்டவை
　செய்குவீர்''

இப்படி 13 செய்யுள்களிலே பொறுமையால் அறிவிழந்த தன் புத்திரனுக்கும், மைத்துனன் சகுனிக்கும் திருதராஷ்டிரன் நீதி சொல்லுகிறான். இதனாலும் திருந்தாமல், ''தருமனைச் சூதாட்டத்துக்கு அழைக்காவிடில் உயிரை விட்டு விடுவதாக அரவக் கொடியோன் தன் அப்பனை அச்சுறுத்துகிறான்.'

துரியோதனனின் மிரட்டலைக் கேட்டு திருதராஷ்டிரன் நடுக்குறுகிறான். ஆம்; புத்திர பாசத்தால்! ஆயினும்,

''பெரிதாய்த் துயர்
　கொணர்ந்தாய்—கொடும்
பேயெனப் பிள்ளைகள்
　பெற்றுவிட்டேன்''

என்று கூறித் தன்னையே நொந்து கொள்கிறான்.

தற்கொலைப் பிரகடனம் செய்த மைந்தனைப் பார்த்து, திருதராஷ்டிரன் சொல்வதைப் பாரதியாரே கூறுகிறார், கேட்போம்:

''விதி! விதி! விதி! மகனே — இனி
வேறெது சொல்லுவன் அடமகனே!
கதியுறுங்கால மன்றோ — இந்தக்
கயமகன் என நினைச் சார்ந்துவிட்டான்?
கொதியுறு முளம் வேண்டா — நின்றன்
கொள்கையின்படிஅவர் தமையழைப்பேன்
வதியுறு மனை செல்வாய்! — என்று
வழியுங் கண்ணீரொடு விடைகொடுத்
　　　　　　　　　　　　　　　தான்''

தன் குருட்டு விழிகளிலிருந்து ஒழுகும் கண்ணீரைத் துடைக்க நினைப்பற்றவனாகி ''நின்கொள்கையின்படி யவர்தமை அழைப்பேன்'' என்று தானே பேயென வருணித்த மகனுக்கு உறுதி கூறி ''வதி யுறுமனை செல்வாய்'' என்று விடை கொடுத்தானும்!

எவ்வளவு நல்லவனும் புத்திர பாசத்தை வெல்ல முடியாதுதானே! அந்தப் பாசம் தான் தற்கொலை செய்துகொள்வதாக மிரட்டிய துரியோதனனிடம் பணிந்து போகச் செய்திருக்கிறது திருதராஷ்டிரனை! இந்த மன மாறுதலானது பாத்திரங்களைப் படைப்பதிலே பாரதியாருக்குள்ள திறமையைக் காட்டுகிறது.

மகாபாரதக் கதையில் வரும் விதுரனை மிகவும் நல்லவனாகவே வியாசர் படைத்திருக்கிறார். அவனை இன்னும் பலபடி மேலே உயர்த்தி மிக மிக நல்லவனாகப் பாரதியார் காட்டுகிறார். கொடிய மைந்தர் நூற்றுவரைப் பெற்ற திருதராஷ்டிரனின் உடன் பிறப்புத்தான் என்றாலும் சேற்றிலே முளைத்த செந்தாமரை போன்றவன்!

அந்த விதுரனைத் தமது அரசியல் பிரசாரத்துக்கு மிகவும் திறமையாகப் பாரதியார் பயன்படுத்திக் கொள்கிறார்.

சூதாட்டத்துக்குப் பாண்டவரை அழைப்பதாகத் தன் தீவினையால் பிறந்த மைந்தனை துரியோதனனுக்குத் திருதராஷ்டிரன் உறுதி கூறியபின் அதனை நிறைவேற்றுவதற்கு விதுரனைப் பயன்படுத்துகிறான். அவனை அரசவைக்கு அழைத்து, 'தம்பி, விதுரா! நீ இந்திரப் பிரஸ்தத்துக்கு ஏகி, அஸ்தினாபுரத்தில் புதிதாக அமைந்துள்ள மண்டபத்தைக் காணப் பாண்டவரை அழைத்து வா! இங்கு வந்ததும் சூதாட வேண்டிய அவசியமும் ஏற்படலாம் என்பதையும் பேச்சுப் போக்கில் குறிப்பாகச் சொல்லிவை'' என்கிறான் திருதராஷ்டிரன்.

இதைக் கேட்டதும் அலறித் துடிக்கிறான், பெரியோன் விதுரன்.

ம.பொ.சி

(மயிலை இலக்கிய வட்டம் பாரதிய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து.)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani, Lay-Out Artist: Kalpana, Editor: K. Rajendran

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

## புதிதாக மாற்றியமைக்கப்பட்டதால் மேன்மையாக இயங்குகிறது: விரைவாகவே குளிர்ச்சியடைகிறது.

தீவிர ஆராய்ச்சி மற்றும் கடும் உழைப்பின் விளைவாக ஜான்ஸன் அளிக்கும் புதிய, மேன் படுத்தப்பட்ட மிக்சர்-கிரைண்டர் எல்லா வேலைகளையும் சிறப்பின் சிகரமாகச் செய்கிறது.



**கிளர்ச்சியூட்டும் புது அம்சங்கள் பாரீர்!**

**முழுமையான செயலாற்றலுக்காக தனிச்சிறப்பு வாய்ந்த பிளேடுகள்**

இரு கிண்ணங்களிலும் அமைக்கப்பட்ட புதிய பிளேடுகள் மேலும், கீழும் மற்றும் சுழன்றும் இயங்குவதால் முழுமையான செயலாற்றல் கிடைக்கிறது. கட்டிகளோ, தானியங்களோ இருக்க வாய்ப்பில்லை.

**மேல்பாகத்தில் இடைவெளி இருப்பதால் துரித குளிர்ச்சி**

சூடான காற்று துரிதமாக மேல்பாக இடைவெளியிலிருந்து வெளியேறுவதால் மோட்டார் சூடாகாமல் 45 நிமிடங்கள் தடையின்றி இயங்க முடிகிறது. சாதாரணமாக மோட்டார் எரிந்து விடும் அபாயமில்லை.

**புதிய கலவை கிண்ணம் தாராளமான காற்றோட்டத்திற்கென.**

கலவைகிண்ணத்தின் வளைந்த உட்பாகம் பிளேட் இயங்குவதற்கு வாகாக அமைக்கப்பட்டிருக்கிறது. சீரான கலவை கிடைப்பதோடு சரியான அளவுதான் இதில் அடங்கும்.

**எவர்சில்வர் கிண்ணத்தில் சீரியமுறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி**

சீரிய முறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி எவர்சில்வர் கிண்ணத்தைக் கையாள எளிதாகவும், சௌகரியமாகவும் இருக்கிறது.

**சுகாதாரத்திற்கென இரு கிண்ணங்கள்; பாதுகாப்புக்கென இரு பிளேடுகள்**

இரு தனி கிண்ணங்கள் இருப்பதால் கலவை செய்தவுடன் கழுவும் தொல்லையில்லை. வேறு கிண்ணத்தில் அரைக்கலாம். சிரமம் குறைவு. மில்க் ஷேக்குகளில் மசாலா மணம் கலப்பதில்லை. உறுதியாக இணைக்கப்பட்ட பிளேடுகள் முழுமையாக பாதுகாப்பு அளிக்கின்றன. இயங்கும்போது பிளேடுகள் பறந்து செல்லும் அபாயமில்லை.

**ஜான்ஸன் மிக்ஸர் கிரைண்டரின் முதன்மையான சிறப்பு அம்சங்களும் இதிலே உள்ளன.**

- துப்புரவாகச் சுத்தம் செய்ய எளிதாகக் கழற்றக்கூடிய பாகங்கள்
- செம்மையாக வேகத்தை மாற்ற மேன்மையான இஞ்சர் விசை.
- ஒரு வருட உத்திரவாதம் மற்றும் சிறப்பான பின் விற்பனை பணி.



JOHNSON

ஆற்றலிலும், இயக்கத்திலும் இணையிலாச் சிறப்பு கொண்டது.

Parade/BE/8122

